# சந்திரன் கழுவாய்ப்படலம்.



மாமலரோன்றருமைந்தனத்திரி
காமருகற்பினார்சவினும்பூங்கொடி
ஆமனசூயையையன்பின்வேட்டனன்
யாமவள்கற்பினையியம்பற்பாலதோ. (௧)

தேவரிற்சிறந்தசெம்பவளமேனியான்
பூவருமுந்தியான்புண்டரீகனா
மூவருமவணிலைமுன்னிநாடியே
யாவருஞ்சொலமகவாயினாரரோ. (௨)

அன்னமாமகவினம்மலரவன்படி
வென்னநின்றிலகியவிரவினாயகன்
பொன்னிடைக்கலைபயில்பொற்புநீடினான்
துன்னிருங்கலையெலாஞ்சூழ்ந்துகற்றனன். (௩)

இந்திரன்பாற்செலவெண்ணிப்பொன்னுமச்
சந்திரன்றனையழைத்தினையசாற்றுமால்
மந்திரநான்மறையாளர்வந்திடிற்
சிந்தையினோர்குறைசெப்பலின்றியே. (௪)

ஓம்பிநின்றொருமகக்குரியநற்பொருள்
எம்பலிற்றேடியென்மனையைக்காத்திடென்
றும்பரிசியம்பினானவனுமம்மொழி
மேம்படுமொழியெனவிரைவினாடினான். (௫)

மாமதிதன்குருவாசகந்தனை
ஏமமாமறைமொழியென்றுகொண்டரு
காமரபினீனவண்காத்தனன்பெருஞ்
சேமநன்னிதியினைக்காக்குஞ்செய்கைபோல். (௬)

வேறு.

கண்டாளொருதாரையுமாலோன்சவினையுள்ளங்
கொண்டாள்குழைந்தாள்கொடிதாமயனெஞ்சின்மூள
விண்டாளொருநாண்முதலாயவிரையவன்றாட்
குண்டாயகாமத்துயரெங்ஙனுரைப்பதம்மா. (௭)

நலனாவதுகாமமெனப்படுநன்றிஞ்ஞாலம்
புலனாடியோதப்படுமெய்ப்புராரியுந்தான்
தலைமீதுகொண்டானொருதையல்சதுமுகத்தோன்
கலைமானைநாவில்வைத்தானரங்கொண்டான்சரியமாலோன். (௮)

ஆகண்டலனாயிரங்கண்ணனுமாயினானென்
சோகந்தந்தனையின்னணமென்றுதொகுப்பதுண்டே
ஆகந்தனையங்கரிவைக்கருளந்தனாளன்
வேகந்தருதண்ணருளென்றுகொன்மேவுமெற்கே. (௯)

என்றேநினைந்தாளினியேகுதுமென்னவாலோன்
தன்பாலணுகத்தனிவந்தமைசாற்றிடென்ன
நுன்பாலணுகும்பொருணான்றனைநேடியென்னை
இன்றேதெறும்வெங்கொடுங்காமமிரியவென்றாள். (௧௦)

அன்னாயிதுகேளடாதென்பதறிதிநிற்குச்
சொன்னாரெவரித்தனைத்தீச்செயறாமிதென்றே
நன்னான்மறைகூறிடுநானுனக்கோதிநிற்ப
தென்னேயெனமற்றவற்காங்கவளேதியம்பும். (௧௧)

யாரேயெழின்மிக்கவர்நின்னினுமில்லைகண்டாய்
போரேறனையாயொருமும்மைப்புவனிமேலிங்
கோராதுரைசெய்பரிசென்கொலுடற்றுகின்றான்
நாரேயிலாநெஞ்சொடுமாரனலியவம்மா. (௧௨)

எனநாடியகூறியதாரையையிந்துவென்பான்
மனமாண்பிலர்தார்செயலீதுனைமன்றல்வேட்ட
தனிநாயகனையொருவந்தந்தணத்தனன்றோ
சனியாயினைமேயினையிங்கெனைத்தக்கதன்றே. (௧௩)

அபலானையுளத்துனுமாதருமன்பிலாரும்
வியன்மாநிலமேலலகாயுருமேவுவாரென்
றுயநான்மமறையோதுவதும்முணராய்சொலென்னா
மயனீடியதாரைமனக்கொளமன்றவோதும். (௧௪)

நீரோதிநின்றநிலையும்மதுநின்றுகேட்ட
தீராதகொடுந்துயர்ச்செய்தியுந்தீர்கலாத
பேராநிரயநிறுத்தும்மெனிற்பேதையேனை
யாராநினைந்தீண்டுரைசெய்வதடுப்பதன்றால் (௧௫)

பதியானவன்மேற்பரிவற்றபதகிசொல்லும்
மதியேநினைநெஞ்சிடைச்சாலமதித்திருந்தேன்
மதிமாழ்கினையாலுரமோவினைமாண்டகாமோ
ததியூடொருநாம்படிந்தாழ்ந்திடத்தக்கதன்றே. (௧௬)

காமக்கடலிற்புகுந்தாழ்ந்தகயத்தியுய்யச்
சேமப்புணைநின்கலவித்தொழிலென்றுதேர்ந்தேன்

காமத்தினுக்கிங்கிலைநோக்கெனக்கட்டுரைப்பார்
நீமற்றெனக்கேநிகரில்பகையாகிநின்றாய். (௧௭)

ஏட்டின்படிப்பிங்கிவனோதினையென்கொலாமம்
மாட்டின்மிசையேறிவருட்பெருமானுமையற்
காட்டின்புடையெய்தியோர்பாதிகனங்குழைக்கே
ஈட்டித்தரநின்றனனின்னறிவின்மையாதோ. (௧௮)

காமாந்தகாரமெனுங்கள்ளினைமாந்திநின்றேன்
வேமாலெனாதுமனமென்செயவெண்மதிப்பேர்ச்
சோமாவெனமற்றவணாணந்துறந்தவன்றன்
மாமேனிமுற்றுந்தழீஇநின்றனண்மாண்பிலாதாள். (௧௯)

என்னானுமொழிந்துமவன்றனக்கின்னல்செய்வாள்
தன்னானிறுகத்தழீஇநின்றுதணந்துநாணங்
கொன்னேயழிதந்தனள்கோமளக்கொம்பரன்னாள்
அன்னானுமுன்னைவினையுந்தவமைந்துநின்றான். (௨௦)

பானீர்திலதண்டுலமென்னப்பரிந்துகூடி
ஆனாதவின்பக்கடலாழ்ந்தனராயவேலை
ஞானாகரனாமொருபொன்னனுகித்தெரிந்தான்
மானாளடைந்தமதிக்கேடுமரபினம்மா. (௨௧)

ஆலோனையழைத்தென்னடந்தாயறிவேயிலாதாய்
நூலோர்ந்தநீயுமொருநுண்ணறிவெங்கொழிந்தாய்
மேலோர்ப்பிழைத்தவிஃதென்றுவிடிவதென்றே
வேலாவலயநிலமேற்கயரோகமேவி. (௨௨)

நிற்பாயெனவேநெடுஞ்சாபநிகழ்த்திநின்று
பொற்பாற்றனதில்லகலென்றுபுகன்றுளானால்
நற்பாலொடுமாண்டளப்பானுநயக்குமாலோன்
சொற்பான்மையாற்பொன்னினையேத்தியுஞ்சொல்லுமாலோ. (௨௩)

யான்செய்தகுற்றமிதுவன்றெனதூழலாது
தான்செய்ததன்றுதமியேனைப்புரந்திடென்று
மான்செய்தமேனிமதியோன்குறைமாண்பினோதத்
தேன்செய்தசின்மொழியாற்பொன்னுரைசெய்யுமன்றே. (௨௪)

கொடுஞ்சாபமேற்றுத்தரியேனெனக்கூறிநின்றோன்
நடுங்காவுரைப்பச்சினந்தாண்டளப்பானயந்து
கெடுஞ்சாபமென்றேயுளநாடினைகேட்டிபாரை
அடுஞ்சாபமேருவுடையானருளாலுமன்றே. (௨௫)

அற்றுகலினீயொருதொண்டைநன்னாடடைந்து
கற்றார்கழறுங்கடலொற்றிக்கவினகர்க்கும்
பற்றேதுமிக்கும்வலிதாயப்பதிதனக்கும்
உற்றோங்குநாப்பணொருமுல்லைவனமுமுண்டால். (உ௬)

நீயத்தலமுற்றரன்பூங்கழலேயமெய்தி
வேயொத்ததோளிமகிழ்வித்தகற்பூசனைக்கே
ஆயத்தகுநாண்மலர்கொண்டருச்சிக்கின்னே
மேயிப்பெருஞ்சாபமுநீங்கும்விடைகொளென்றான். (உ௭)

வேறு.

விடைகொண்டவுடுபதியும்விமலனிருகழல்பரசி
நடைகொண்டுதென்னாற்றி நகர்கண்டுபணிந்தேத்தி
விடைகொண்டகேதனத்தார்விழைந்தமருபதியெனவெப்
புடைகொண்டுபரவும்வடமுல்லைவனம்புகுந்தனனால். (உ௮)

புகுந்துகுமரத்தடநீர்ப்பொய்கைதனிற்குழைந்தாடி
நகும்பரிசானெயின்மூன்றுநாடியெரிசெய்தபிரான்
மகிழ்ந்துறையுந்திருக்கோயில்வலங்கொண்டுபசுபதியே
சகந்தனையன்றளந்தவிடைத்தனியழகாவெனத்துதிப்பான் (உ௯)

வேறு.

வாதனையாணளும்வருந்துவேமுக்கிரங்கிப்
பாதமலர்சென்னிமேற்பரிவாகச்சூட்டுமொரு
மாதொருபாகன்மணிகண்டனெங்குமரன்
தாதைதனைத்தாழாததலையென்னதலையே
சங்கரனைத்தாழாததலையென்னதலையே. (௩0)

கழையானைநுதல்விழியாற்காய்ந்தானைக்கைம்மே
லுழையானையன்பர்மனத்துறையானையோங்கும்
பழையானைறைவடசளிபெம்பண்ணவனைமுல்லை
விழைவானைநோக்காதவிழியென்னவிழியே
விடையானைநோக்காதவிழியென்னவிழியே. (௩௧)

கோமுத்திமேயகுருமணியைமெய்ஞ்ஞானப்
பாமணக்குநால்வர்பரசவருள்செய்வானைக்
காமணக்குமுல்லைக்கடவுளையன்பான்மறைசொன்
மாமணியைவாழ்த்தாதவாயென்னவாயே
மதித்தவன்சீர்வாழ்த்தாதவாயென்னவாயே. (௩௨)

அற்பகத்தினேவாவரிப்பிரமரிந்திரர்தஞ்
சொப்பனத்துங்காணுச்சுடர்க்கொழுந்தைபெஞ்ஞான்றுங்

கற்பனையைத்தான்கடந்தகாமருசீர்முல்லைக்
கற்பகத்தைக்கூப்பாதகையென்னகையே
காரணனைக்கூப்பாதகையென்னகையே. (௧௩)

அண்டத்தார்க்கப்புறத்துமானானைமாமதியத்
துண்டத்தானைத்துளக்கில்சோதியனைமாமறைசொல்
பண்டத்தானைப்பரிவாய்ப்பாற்கடனஞ்சுண்ட
கண்டத்தானைக்கருதாக்கருத்தென்னகருத்தே
கருமணியைக்கருதாதகருத்தென்னகருத்தே. (௧௪)

விண்டானையானீழன்மேவிமறைநான்குங்
கண்டானையெவ்வுலகின்காரிகையையோர்புடையே
கொண்டானையுள்ளமென்றுங்குழையாதார்தம்மையிவ
ணண்டானையறியாதவறிவென்னவறிவே
அமலனையேயறியாதவறிவென்னவறிவே. (௧௫)

வேறு.

அடைவினின்னணந்தோத்திரம்புகன்றவாலோனுங்
கடையனேனதிபாதகனாவதுகருதி
யுடையநாயகபுகல்பிறிதின்றெனவோர்ந்திப்
படியின்மேலெழிற்கருணைபாலித்தனைபரிவான். (௧௬)

நீலகண்டவெண்டோளவாணிலாவணிசடில
மூலகாரணமும்மதின்முறுவலானெரித்த
பாலலோசனபராபரபரிந்தெளிவந்த
சீலமென்னணஞ்செப்புகேன்சிறியனேனெந்தாய். (௧௭)

என்றுகூறியெட்டுறுப்புநன்னிலமுறவேத்தக்
குன்றவார்சிலைகோட்டியகுழகனுமனையாற்
கன்றுசாலவுமிரங்கிநீயாற்றியபூசை
நன்றுகொண்டெனநின்பவமிரிந்ததுநவிலின். (௧௮)

பொன்னளித்தவெங்கயப்பிணிபுனிதநீர்ப்பொய்கை
தன்னுடைப்பரிசத்தினானகன்றதுதாவில்
நின்னிலைக்கணேயடைகெனவிறையவனிகழ்த்திப்
பன்னருஞ்சிவக்குறிவயிற்கரந்தனன்படிவம். (௧௯)

உடுக்கணத்திறைமாசிகந்தோங்குமாமணியைக்
கடுப்பநின்றுதன்பெயரினக்கவினகர்த்தென்பால்
இடத்தொர்பொய்கையையகழ்ந்துசின்னாளினிதிருந்து
சடுக்களத்திறைவிடைபெறீஇத்தன்கதிசார்ந்தான். (௨௦)

பொன்னிடுங்கொடுஞ்சாபத்தாற்புழுங்கியவாலோன் ,
மன்னும்பூம்பொழின்முல்லையைமனமகிழ்ந்திறைஞ்சித்
துன்னருங்கழுவாயுறும்பரிசுசொற்றனமேல்
அன்னவன்மனைக்கிழத்தியர்வழிபடலறைவாம். (௪௧)

சந்திரன் கழுவாய்ப்படுபடலமுற்றிற்று.

---

# அசுவனிமுதலியோர்வழிபடுபடலம்.



பொன்பூத்தமகரந்தப்பொகுட்டலர்வாழ்க்கையனுகப்பொலியுமேலோன்
மன்பூத்தபுகழ்க்கிரதுபுலகனங்கிராத்தருமன்வசிட்டன்றக்கன்
கொன்பூத்தபெருந்தவத்தத்திரிமுன்னுந்தவரினென்றுங்குறிக்கருஞ்சீர்த்
தென்பூத்ததக்கனுந்தன்றுதைதனையிறைஞ்சியிதுசெப்புமாலோ. (௧)

நிலவுலகத்திடையொருமுத்தொழினடத்துமவர்தம்மினெடுநான்று
தலைமையுடையானெவனெத்தன்மையானவனென்னச்சதுமுகத்தோன்
நலமந்தமின்மறைசொற்றிடுமமரர்தமிற்றலைவனகுவெண்டிங்கள்
இலகுசடைப்பரம்பரனேயனுதிமலமுத்தனெனவியம்பக்காண்டி. (௨)

நத்துசருவஞ்ஞதையனுதிபோதந்திருத்திரவிலனுத்த
சத்திசுவதந்திருதையோடனந்தசத்திமுன்னுந்தகுகுணங்கள்
அத்தகுசிற்பானுக்கேயுரித்தாமென்றிணிதெடுத்திங்கறையுமாண்பான்
மெய்த்தவாகமஞ்சிறந்ததெனவறிதியென்றும்வியன்புலமைமிக்கோய். ()

சிருட்டிமுன்னுமுத்தொழில்கடன்கருணையாற்பொதுவிற்செய்யும்பாலத்
திருக்குடையானருவியருதொழுகும்வடகயிலையெனுந்தெய்வஞான
வரைப்பினென்றுந்திகழுமொருநாற்றேர்களொடுமருவிமரபினென்றும்
இருக்குமுன்னுங்கலையெனைத்துமுழுமுதலென்றெவனையெடுத்தியம்புங்கண்டாய்.

சருவகாரணன்சருவபூத்தமனியன்சருவாபீட்டநல்கும்
ஒருவனவன்றன்னன்பர்வேண்டியனவேண்டியாங்குதவாநிற்பன்
அருமகவாயென்னுழைவந்தாயவனைநீயிஞ்ஞான்றன்பினுடிப்
பொருவருமெய்த்தவம்புரியிற்பெறலரும்பேறெய்திமிகப்பொலிவைகண்டாய்

அன்னதுகேட்டொருதக்கன்றுதைதனையிறைஞ்சிவிடையன்பாலேற்றுத்
தன்னிகரின்மானதவாவியையணைந்தாயிரம்பருவந்தவஞ்செய்கிற்பக்
கன்னியொருபாற்பிரியாக்கருணையார்கலியனுகிக்கரையுநீயு
மென்னவிழைந்தென்னேக்கித்தவஞ்செய்தாயெனவவனுமியம்புமாலோ. (௬)

பொலம்பூத்தகொன்றையந்தார்பூத்தமதிச்சடைபூத்தபுனிதமுந்நீர்
நிலம்பூத்ததிருவுந்திப்பெரும்பாணுநான்முகனுநேடிக்காணு

வலம்பூத்தமழுவாளியெனநினையேநாடுகிற்பார்மருவுமெந்தாய்
குலம்பூத்தநலம்பூத்தகொள்கையேனலனெனையுங்குறித்ததென்னே. (எ)

காண்டன்முன்னுமளவைகளார்சாண்பரியபரம்பரனேகருத்துக்கெட்டாச்
சேண்டயங்குபேரொளியேசிற்பரனேதான்பிரியாதெய்வஞான
ஆண்டகையேயாரணமாமறைப்பயனேயறிவறியாச்சிறியனேன்பா
லீண்டெளிவந்தருளியவாறென்னேயோவறியகிலேனெந்தாயெந்தாய். (அ)

பாசமகலாதுபதியிற்கலவாதிருக்குமின்பப்பரவைதன்னை
மாசகலவருளு[illegible]ருவுடையோர்பாலுடையவள்ளால்ஞான
பூசனைசெய்வாருள்ளப்பூங்கோயின்மருவியவற்புதமேயென்பாற்
பேசவெளிவந்தனையானின்கருணையிருந்தவாபேசற்பாற்றே. (கூ)

வேறு.

என்றதக்கனுமம்மையப்பனையெய்தநோக்கியனைத்துமென்
றன்சிருட்டியினேய்ந்திடப்பணைதானுமென்றவமாண்பினன்
இன்றோர்மாமகவாகநீயுமெனக்குமாமருகாகவே
மன்றவாணவரந்தராயெனமன்றநாடியிறைஞ்சினன். (க௦)

அன்னதாகுகவென்றபின்றையெமண்ணல்மால்விடையூர்ந்தெழிற்
கன்னியோடுமகன்றனன்கயிலாயமால்வரைகாதலான்
பின்னுமற்றவன்வேதவல்லியெனும்பெருந்திருவேட்டபின்
தன்னதாணைநடத்தினனொருதக்கமாபுரியின்கணே. (கக)

அன்னளோடவனன்றிருன்விழைபோகமங்கயர்வான்புரிந்
துன்னரும்புகழ்துன்னுமாயிரமைந்தர்தம்மையுவந்துதந்
தின்னறீர்தரமெய்த்தவம்புரிசென்றுமானதவாவிவா
யென்னையாளுடையானைநாடியவினிதவர்க்குமியம்பினன். (கஉ)

தந்தைசொற்படிமைந்தர்சென்றுதவம்புரிந்தனர்தந்தைபோல்
எந்தைதாளையிறைஞ்சியாக்கலெனுந்தொழிற்குரியாரெனாச்
சிந்தைநாடியகின்றனர்சிவஞானமீதலவென்றவர்
புந்திதன்னிலைமாற்றுவானவணெய்தினன்புகழ்நாரதன். (கங)

வேறு.

மைந்தர்கேண்மினிந்தஞாலவாழ்க்கைநீரின்மேலெழுத்
திந்தநீர்மையென்றுகண்டுநுந்தையெம்பிரானிணைச்
சந்தமாமலர்ச்சரண்டணைப்பழிச்சிவீடுபே
றந்திலெய்திடாவணந்தடுத்தவாறதென்கொலோ. (கச)

கற்பமெத்துணைக்கழிந்தசரியமாலுமயனுமே
சிற்பமென்றுதோன்றிநின்றழிந்தநீர்மைசெப்புதற்

கப்பரன்றனுதருட்பரிசினன்றியாவதோ
எய்ப்பில்வைப்பெனுஞ்சிவன்றனைக்கருத்தினெய்தினீர். (கரு)

தந்தைதாய்தமர்முதற்சழக்கணைத்துமிவ்வுடல்
வந்தவாறுநோக்கினுன்மரபுளிப்பொருந்துமோ
அந்தமாதியேயிலாவரன்கழற்கணன்புறுஞ்
சிந்தையாளர்தேர்வரிச்செகத்தினீர்மையாவுமே. (கசு)

வந்தவாறுநாடிலீர்வருந்திநின்றுமெய்த்தவம்
புந்திநைந்துபுரிவதும்புராணனைப்பொருந்தவோ
நந்துகைத்தலத்துமாதர்நலனுறத்துணிந்ததோ
எந்தைசொன்மினென்றனனிருந்தவத்துமேயினுன். (கஎ)

வேறு.

என்றுகூறியநாரதனிணையடியேத்தி
ஒன்றுமாதவகேட்டியாலும்பரானடியை
இன்றுநன்குறும்பரிசெமக்கியம்பிடிங்கென்ன
மன்றவாணனையிறைஞ்சியம்மாதவன்புகலும். (கஅ)

ஞானமேயொருமூவகையெனமறைநவிலும்
ஞானமேதவமென்பதுநாடவர்மரபான்
ஊனமேமலிபாசஞானம்முயர்பசுவின்
ஞானமேபதிஞானமென்றிலகிடுநலத்தான். (ககூ)

ஓதிடும்பாசஞானநால்வாக்கினற்பகுதி
வேதமாதியகலையெனவிளம்புசொற்பவஞ்சம்
நாதமீறெனக்கிளத்தியநற்பொருட்பவஞ்ச
பேதமோடெனப்பெரிதுநின்றுணர்திர்மெய்பிறங்க. (உ0)

ஏதிலாப்பசுஞானமீண்டிவற்றினைக்கொண்டு
போதுமாருயிரிணையதம்புடைவியாப்பியமென்
றோதுநீர்மையையுணர்ந்தவைகழன்றுநின்றோங்கி
மாதொர்பாகனேயெனத்தலைமதித்திடுமதுவே. (உக)

சந்தமார்பதிஞானமாவதுதகுபானெய்
இந்தனத்தெரிகனிவயினிரதமெள்வயினெய்
அந்திலென்னநின்றிடுமிறைவனையடிஞானச்
சிந்தைசெய்தவன்றிருவருளானறிவதுவே. (உஉ)

அன்னமாதொருபாகனையந்தரியாகம்
என்றுமெய்தரும்பூசனையியற்றிடுமேலோர்
தன்மையீதெனச்சொற்றிடுந்தகையதோவரன்சேர்
என்றுமேவியவந்தணீரென்றியம்பினனுல். (உ௩

அவ்வருந்தவரனைவருமவனுரையென்னும்
செவ்வழிக்கணைநின்றுசிற்சபாநடம்புரிவோன்
எவ்வமில்பெருங்கருணையானெய்தினரினையோன்
கவ்வைதீர்தருங்கமலச்சேவடிநிழல்கவின. (உச)

பின்னருந்தக்கனுயிரமகார்தமைப்பெற்று
முன்னனுப்பியவாறுபோலிவரையுமுன்னி
மன்னுமானதவாவிவாய்ச்செல்கெனவிடுப்ப
அன்னமாதவனன்னணம்புரிந்தனனன்றே. (உரு)

தக்கன்மீச்சினந்தித்தகுகொடுமைதான்புரிந்தான்
நற்கடற்புலத்தோரிடநயந்துமேவாமே
எக்கணுந்திரிதருகெனவிட்டனன்சாபம்
திக்கெலாமிகச்சலித்தனதிரிந்தனவுலகம். (உசு)

நங்கைமார்தமைநல்கியேநானிலவரைப்பி
னெங்கணும்விருத்தியைமிகச்செய்வலென்றெண்ணிச்
சங்கைதீர்தரவிருபதின்மூவரைத்தந்து
பொங்குசீர்த்தருமன்முதற்புங்கவர்க்களித்தான். (உஎ)

வேறு.

பின்னருமாங்கவனிரலைமுன்னோன்பான்மூவர்தமைப்பெரிதுநல்கி
மன்னுநிசாகரனையெழின்மன்றலயர்வித்திவரைமரபினாளும்
இன்னலந்துய்த்திடுகென்னவவனிரலைநாளினையேயெந்நாளும்
நன்னலந்துய்த்திடப்பொருதேனையோர்தந்தாதைநளினத்தாட்கீழ். (உஅ)

சென்றுதொழுதெந்தாயம்புலிமானந்தனையலரற்சிந்தைநாடா [மென்
றென்றுமெமைவருத்தியசீர்மையையுணர்ந்தும்முறையுணர்த்தவெய்தினோ
றன்னமடவாருளைப்பவவன்றருவித்தறிஞனெனவகத்தினின்னை
யுன்னினன்சாலவுமஃதின்றேயொழிந்ததெனச்சினந்திட்டுரைப்பதானான். ()

பேரழகுபடைத்தனமென்றிறுமாந்துநின்றனையாற்பேதாயென்னை
யாரெனநின்னுளத்துன்னியென்மொழியைக்கடந்தனையாலின்றுதொட்டுன்
ஈரிரண்டினான்மையாங்கலைகள்குறைந்தின்னலினாலேங்குகென்றே
ஆரமுதகிரணனைத்தானோக்கிநெடுஞ்சாபநனியறைவதானான். (௩௦)

என்னருமைமக்களையோரத்தொழுக்கினொழுகினையாலிருநீர்சூழ்ந்த
நன்னிலமேனின்னழகிற்கேதுவாங்கலைகுறையநாளுமென்றே
அன்னநெடுஞ்சாபம்பின்விளைவுநோக்காதளித்தானாலோனேற்றுத்
தன்னரியதலைகுறுகியோர்கலையாயயனுலகந்தானுற்றான். (௩௧)

தனக்கந்தச்சிறுவிதிதந்தமைபுணர்த்தவுணர்ந்ததாமரையோனீசென்
றனைத்துயிருக்குயிராயபரம்பரனைப்போற்றிமொழிபடுகவென்ன

உனற்கருஞ்சீர்வடகயிலைமால்வரையுற்றும்பராணுழைச்சென்றேதச்
சினத்தொருமூவெயிலெரித்தசேவகனுங்கருணையினற்செப்புமன்றே. (௩௨)

எம்மருளானிற்றைமுதனின்றகீர்மையையெப்பியிலங்கிடன்றேன்
வெம்மைமிகுஞ்சாபமொழிகுன்றுமேபின்னீர்மைமேவிமென்று
கொம்மைமுலைக்குவட்டொருபாற்குழகனருளியசீர்மைகுறித்திட்டாலோ
ணிம்மையெனைநலிசாபந்துடைத்தனையென்றேம்பலினேடியம்புமன்றே. ()

கலைபுனைந்தகீர்மையினற்கலைமதியஞ்சூடியெனக்கடல்சூழ்ஞாலம்
சொலவெனக்கோர்வரந்தருதியெனவிறைவனன்னணமேதோன்றுலென்னைக்
கலைபரவக்கடவதன்னணமென்னவாலோனுங்கனிவினெந்தை
பொலமலர்த்தாட்சரண்பணிந்துதன்கதியையேநாடிப்போந்தானன்றே. ()

வேறு.

இன்னவாறிவணிகழ்ந்துழியிருவருளொழிந்த
கன்னிமாரெலாங்கணவனைத்தாம்புரிந்திட்ட
இன்னலுக்குளைநைந்துநைந்தென்னினைந்தீண்டின்
றென்னியற்றினேமென்னநின்றுப்குவானிசைந்தார். (௩௫)

கற்பிலக்கணமாவதுகணவன்றன்வழியே
நிற்பதன்றிமற்றெவன்கொலாநெடியவன்சாபம்
பொற்புநீடவனுருவினையலைக்கவும்புரிந்தாம்
அற்பவன்புடையுடையமோநாமணுத்தனையும். (௩௬)

காதலன்மனம்வருந்துமோர்காரியம்புரிந்தாற்
பேதுறும்மிரவுரவமுன்னிரயமேபெரிது
மேதினிக்கணேயெய்துவாரெனவிளம்பிடுநூல்
ஆதலாற்புரிதீவினைக்கவதியுமின்றால். (௩௭)

கண்ணிழந்தபிற்கதிரவன்பூசனைபுரிவார்
மண்ணின்மேலிலராதலான்மலையவன்பயந்த
பெண்ணருங்கலமாமுமைபிரசமாமலர்த்தாள்
நண்ணியேத்திடக்கழியுமிந்நலிதுயரென்றே. (௩௮)

மாலதீவனமடைந்துமைமலரடிபழிச்சிச்
சாலவேகினரவ்வழிச்சகடுமித்தனைக்கு
மூலமாயினேனென்றவரொடுவடமுல்லைக்
கோலநீடியபதிவயிற்குறுகினதம்மா. (௩௯)

வேறு.

ஒன்பான்மூவருலகுடையாளையுளநாடி
அன்பான்வழிபாடாற்றிடவன்றோர்க்கருள்செய்வாள்

முன்பாய்நின்றவுமையைக்கண்டார்மொழிவாரால்
துன்பேயோவவந்தாயென்றேதுதிசெய்வார். (௬௰)

கோண்டானுக்கேயின்னலிழைத்தோங்கொடியேமிங்
கெண்டானில்லாத்தீவினைசெய்வானிடனுளேம்
கண்டாரில்லையெம்போற்பாவக்கலனென்றே
விண்டாரன்றேயன்னையருஞ்சேர்மிகவுன்னி. (௬௧)

வேறு.

பொன்னேகருணைப்புயலேபொருமுப்புரையெனும்பேர்
மின்னேமெய்ஞ்ஞானவிளக்கேநின்னடிவிரைமலர்தூய்
என்னேகொடுந்துயரின்றகற்றுயென்றிறைஞ்சவுநீ
கொன்னேயிருந்தனைமுல்லைக்கொடியிடைக்கோமளமே. (௬௨)

பூவேயப்பூவின்மணமேமெய்ஞ்ஞானப்புனிதமலர்க்
காவேகமலையும்வெண்டாமரையுறைகன்னிகையும்
ஏவேபொரும்விழியாக்கொண்டனைமுல்லையென்னுநகர்க்
கோவேமனமகிழும்பூங்கொடியிடைக்கோமளமே. (௬௩)

மானேமடவனமேபலமாமறையும்வழுத்தும்
தேனேயிலகும்பசுங்கழையேதீவினைதெறுப்பாய்
வானேவளிமுதலாம்பூதமாகவயங்குமுல்லைக்
கோனேமகிழும்பணையேகொடியிடைக்கோமளமே. (௬௪)

மாமாதவனெனச்சொல்வர்கண்டாயம்மணிநிறத்துப்
பூமாதுதன்கொழுநன்றுனின்முன்வரும்பொற்பதனாற்
காமாரியோர்முப்புராரிவலாரிகணிந்துதொழும்
கோமான்வலத்தமர்ந்தோங்குங்கொடியிடைக்கோமளமே. (௬௫)

வண்டோங்குகைத்தலமானையிரந்துன்மகிழ்நனன்று
விண்டாழ்புகழ்சாலியற்பனையாரிடமேவினனீ
கண்டேனுமொன்றுங்கூறிலைமுல்லையிற்கண்ணனைவேக்
கொண்டோங்கியவிளங்கிள்ளாய்கொடியிடைக்கோமளமே. (௬௬)

நந்தாமணிமாசிலாமணிதன்னேயந்துவலம்
அந்தாரணியிற்கொளுமனமேநின்னடிமலர்ச்சீர்
சிந்தாகுலந்தெறுமென்பதுணர்ந்தேன்றிருமுல்லைவாழ்
கொந்தார்குழற்செங்கரும்பேகொடியிடைக்கோமளமே. (௬௭)

ஐயானனத்தெம்பிரான்மாசிலாமணியன்பினுளம்
வையாவெழுதருமோவியமேநின்மலர்க்கணருள்
செய்யாயெனினெப்படியிழைப்பேன்சிறியேமுல்லைவாழ்
கொய்யாமலரனமேபூங்கொடியிடைக்கோமளமே. (௬௮)

ஆலமடங்குங்களத்தனெம்மானருளாளனன்பர்
சீலமறிந்துதவும்வடமுல்லைத்திருநகரான்
பாலமருந்தெய்வவாரமுதேநின்பரங்கருணைக்
கோலமிறைஞ்சவருள்வாய்கொடியிடைக்கோமளமே (௪௯)

போதயனேத்துங்கருணாகரிநின்புனிதமலர்ப்
பாதபதுமந்தனைநாடிநிற்கும்பரிசினருக்
காதரநல்கினைமுல்லையினெய்தமெய்யன்பினொடெங்
கோதறுத்தாண்டருள்கண்டாய்கொடியிடைக்கோமளமே. (௫௦)

மங்கலவல்லிநினைமகவாகவிம்மாநிலத்திற்
செங்கயற்கட்காஞ்சனமாலைசெய்தவஞ்செய்தவரார்
இங்கெளியேந்துயர்தீர்த்திடன்னேயெழிலாருமுல்லைக்
கொங்கவிழ்பூங்குழற்கொம்பேகொடியிடைக்கோமளமே. (௫௧)

வேறு.

என்றேதொழுவார்தமைநாடியிமயவல்லி
நின்றேபுகலுமிவணீரெமைநேடிவந்து
பொன்றாதபாவப்புணர்ப்போவப்புரிந்துநின்ற
நன்றாயதொர்பூசனைக்கிங்குநயந்துமாதோ. (௫௨)

வந்தெய்தினுமித்தலத்தேமகிழ்வாகயாருஞ்
சிந்தைத்துயர்தீர்தரவொண்மலர்செங்கரங்கொண்
டந்தில்வடமுல்லையெம்மானருச்சனையுஞற்றி
னந்தப்பெருவிண்ணவராவதருமையன்றே. (௫௩)

எம்மானைநுங்காதலன்முன்னைஞான்றெய்திநின்று
செம்மாமலர்கொண்டருச்சித்திவண்சிந்திநின்றான்
அம்மாதவனல்கியசாபமுமாங்கவன்றன்
மைம்மாண்குழலாட்புணர்பாவமுமாயவன்றே. (௫௪)

மடவீரினிநீவிருமம்மதிவாழ்க்கையெய்தக்
கடவீரவனோடுபல்போகக்கடலழுந்தி
விடுவீர்சில்போதுபின்னம்பதமேவுவீரென்
றுடையாளுரைத்திட்டெழிலாருமுருக்கரந்தாள். (௫௫)

அம்மாதருமம்மதிவாழ்க்கையடைந்துமேவிச்
செம்மாந்தவன்றனலனெய்திச்சிறந்துவாழ்ந்து
மெய்ம்மாசுநீக்கும்வியனீற்றினினன்புறீஇப்பின்
எம்மான்வலமேவியவன்னையையெய்தினாரே. (௫௬)

வேறு.

மங்கையைவழிபடூஇமாணுடுக்கணஞ்
செங்கையின்மலர்கொடுசிந்தித்தேத்திட
அங்கவர்தீவினையகன்றதீதுமேற்
செங்கதிர்துயர்கெடல்செப்புவாமரோ. (ருஎ)

அசுவனிமுதலியோர் வழிபடுபடல முற்றிற்று.

---

# கதிரவன்றுயர் நீங்குபடலம்.

அந்தணீர்கமலாசனன்வயின்வருமசட்டுச்
சிந்தைமேவியதக்கன்றன்சீற்றத்தினிடுமெவ்
வெந்திறற்கொடுஞ்சாபத்தான்வெண்மதிகலைக
ளந்தில்யாவுமேகுறைதரவழுங்கியுள்ளயர்ந்து. (க)

மாதொர்பாகனைவடமுல்லைமாநகரணைந்து
மாதவஞ்செய்துவரம்பறுகலைகண்முன்னிரம்பக்
கோதிலாவரம்பெற்றமைகூறிடக்கேட்டப்
போதுமெய்த்தவப்புலகனையெதிர்ந்திடப்புலவன். (உ)

பிறந்திறந்துழல்பெற்றிமையுடைப்பிறவமரர்
மறந்தவாதநின்னாணையைமறுக்கிலரெனைத்து
மறந்தவாதமெய்ச்சிந்தையரகத்தவிசமரும்
விறந்தவீசனேநின்வழிப்படருவோன்விளம்பின். (௩)

அனாதிமாமலமுத்தனையனகனையவல
மனாதிக்கெட்டொணாமாண்பனைமம்மர்நீத்தென்று
மெனாதியானெனும்பளகறுமெய்த்தவரிதயந்
தனாதுபீடமாக்கொண்டசங்கரன்றனைச்சிவனை. (ச)

என்னினைந்திவணேழமையாலியம்பினையால்
என்னமற்றவனொருவகையெய்தியசீற்றந்
தன்னைநீத்தருந்தவத்தினாற்றன்வயிற்றோன்று
மன்னைதன்னையன்றரற்கயர்வித்தனன்மன்றல். (ரு)

அப்பெருந்தகையவனிசைவின்றியம்பிகையோ
டற்புதத்திருவுருக்கரத்தலுமவனொருகாற்
பொற்புநீடியகயிலைமால்வரைபுருந்தனனக்
கப்பிரானவன்மாதுலனெனக்கருதாமே. (சு)

நின்றநீர்மையைநெஞ்சிடைக்குறைவெனநினைந்து
கன்றுநெஞ்சனுப்க்கடுந்தொழின்மேவியதக்கன்
சென்றுதீயனகடுமொழிசெப்பிடத்திருமி
நன்றுநன்றெனத்தன்னொருநகரணைந்தனனால். (௭)

அங்கணெய்தியதக்கனுமருமறையனைத்து
மெங்களீசன்மாமகந்தனக்கிறையெனவியம்ப
இங்குளந்தனிற்கருதிடான்மகமியற்றிடுவான்
பங்கயாதனன்முதற்பலவமரரைவிளித்தான். (௮)

விளித்தவானவரவன்வியனணையினமைந்து
களித்தவன்செயுமகந்தனிற்புகுந்துகாபாலி
சுளிக்குநீர்மையையுணர்கிலராய்த்தொடுகடற்பார்
அளிக்குமாயனைமுதன்மையாக்கொண்டவணிருந்தார். (௯)

தக்கன்மாமகந்தனையவண்குயிற்றிடுமேல்லை
பொக்கமில்லதோர்மெய்த்தவப்புங்கவன்றதீசி
மிக்கவன்பினினெய்திமற்றவன்விபரீதந்
தொக்கவநெஞ்சினைமாற்றுவான்றுணிந்துரைக்கின்றான். (௧௦)

வேதநாயகன்வேள்வியினாயகன்விமல
போதநாயகன்புரந்தரன்பூங்கமலத்து
மாதுநாயகன்மலரவன்முதலினோர்வழுத்து
மாதிநாயகனரனெனவறிகிலாய்பேதாய். (௧௧)

பிரணவப்பொருளரியெனப்பிரசமாமலர்மே
லொருவனேயெனவுரைப்பவருளத்தழுக்கறுப்ப
மருமலர்க்கொன்றைமாணிடமேந்தியேபரமென்
றுரைசெய்கிற்குமப்பொருளணுத்துணையுமோர்கிலையால். (௧௨)

மகந்தனக்கிறைமறைமுதல்யோகியேயென்னச்
சகந்தனக்கருமறையெடுத்துரைசெயுந்தன்மை
உகந்துநீயுணராதுமம்மரினுழன்றனையால்
இகந்துநின்றனையாவுமாமிறைவனையென்னே (௧௩)

அவிதனக்குரியானரனல்லதிங்கெவரே
புவிதனக்கிறையெனப்படுமானின்றன்பொருவில்
செவிதனக்குரைப்பாரெவர்திறம்புதலின்றிக்
கவிதனைக்கொடுபொருதவற்கடவுளாத்துணிந்தாய். (௧௪)

வேதநீதிகளின்னனமிகவெடுத்தியம்ப
மாதவத்ததீசியைத்தக்கன்மரபுளிநோக்கிப்

போதவீண்டுனையழைத்ததியான்புரிதராநிற்கும்
ஓதுமாமகஞ்சாண்டலுக்கன்றிவேறுளதோ. (கரு)

எனக்குநீதிகள்புகல்வதற்கன்றெழுமையுநின்
றனக்குமெய்ப்பொருளெனக்கொடுவழிபடத்தக்கான்
மனக்கொவ்வாவெற்புமாலைதான்வனைவனேமறைசொல்
தனிப்பரம்பொருளாவனேசாற்றெனப்பின்னும். (கசு)

வெந்தநீறுசண்ணிப்பனேவிழைந்துயிரனைத்துஞ்
சிந்தையேங்கிடக்கொலைத்தொழில்செய்வனேசெறுத்து
வெந்திறற்கொடுங்கரிமுதல்விலங்கினமுரித்துச்
சந்தமாருடையாக்கொள்வனேநின்றன்குணு. (கஎ)

விடையுகைப்பனேமெல்லியலொருத்தியைக்காவிற்
சடைதரிப்பனேசங்கரிதனைநனிவிழைந்தோர்
புடைசெறிப்பனேபுலவர்கள்வெறுத்தநஞ்சமுதா
அடையக்கொள்வனேநீமுதலெனப்படுமன்னோன். (கஅ)

இனையநிந்தைகளனைப்பலவெடுத்துநின்றியம்பத்
தனைநிகர்த்திடாக்கொடியவெந்தக்கனைத்ததீசி
முனிவன்புன்முறுவலித்தவன்மொழிதடைக்கெல்லாங்
கனிவினுன்விடைநிறுவினுன்கற்றவரேற்ப. (கக)

கோடியமூர்க்கனுமுதலையுங்கொண்டதுவிடாவென்
றொடிவில்சீர்ப்பெரியாருரைக்கிணங்கவவ்வுரவோன்
நொடிதருஞ்சொலைக்கேட்டவணின்றுநொய்யோன்றன்
மடமைநோக்கியேமாதவன்கட்டுரைத்திடுமால். (உ0)

எங்களீசனையிமையவர்பிரான்றனையிகழ்ந்தாய்
பங்கமெய்தினையாற்கொடியாய்பரிந்தாற்றுந்
துங்கவேள்வியுந்தொலையுமென்றுரைத்தவண்சூழ்ந்த
சங்கபாணியாமுதற்பலதேவரைத்தகைந்து. (உக)

புண்ணியம்புரிந்திமையவராயினீர்புரைதீர்
எண்ணில்செல்வமதெய்தினீரிமையவில்வாங்கிக்
கண்ணின்முப்புரஞ்சட்டழித்திட்டகாபாலி
வண்ணமாமலர்ச்சேவடிவழுத்தியதிறத்தான். (உஉ)

அன்னநீர்மையைமறந்தனிரம்பிகாபதிசேர்
தன்னமாகவேமதித்தனிர்சழக்குறுசெல்வங்
கொன்னையேகுதல்கண்டிலிர்கொடியவிவ்வேள்வி
தன்னைநீங்கிடினுய்விரென்றருந்தவன்றணந்தான். (உ௩)

இருதலைக்கொள்ளியிடையெறும்பொத்திமையோரு
மொருதலைத்துணியாதவனுணையினுள்ளம்
பெரிதலைப்பவேநின்றனர்பெரும்பதமிழப்பான்
வருதலைத்துணியாதிதுசெயமனங்கொண்டான். (உச)

மாயவன்றனையரும்பரத்தொருவனுமதித்துப்
பாயசேர்மகமாற்றினன்வேணியிற்பாணி
மேயவித்தகன்விலங்கலைவிரைந்தடுத்தண்மி
நாயனுர்தமக்குரைத்தனனுரதனம்மா. (உ௫)

சொன்னவாசகங்கேட்டவத்தொலைவில்சீர்த்தொல்லோன்
தன்னுளத்தடைத்தவற்குறுந்தண்டமேவிதிப்பான்
உன்னியங்குடல்வியர்ப்புறநின்றனனுவன்பால்
மன்னுசீற்றமோர்படிவெனவீரன்வந்துதித்தான். (உசு)

அவனையற்பொடுமாதரவானனிநோக்கித்
தவறுனுற்றிடுந்தக்கன்மாமகந்தனிற்போந்திட்
டெவற்றுறச்செயவேண்டுமென்றியம்பினனின்னே
புவனிமேலெனப்போர்விடையூர்தியாம்புராரி. (உஎ)

வேறு.

விமலைதன்கூறெனவிளங்குங்காளியோ
டமர்செயவீரனுமடைந்துதக்கனுக்
குமையொருபாகனுர்சேர்த்தியோதினன்
அமைவினுற்சேட்டிலாதகந்தைகொண்டனன். (உஅ)

இந்திரன்குயிலுருக்கொண்டிரிந்தனன்
சந்திரன்காலினுற்றளர்ச்சியெய்தினன்
நந்துடையான்கடனடுவொளித்தனன்
அந்திலப்பகனுங்கண்ணழிந்திட்டானரோ. (உகூ)

கந்தரங்கறுத்தநங்கடவுண்மைந்தனும்
அந்தரர்யாரையுமழித்துநீக்கியே
முந்துறுகாலவெந்தீயின்மும்மையான்
சிந்தையினவன்செயல்செப்பற்பாலதோ. (௩0)

தக்கனையெச்சனைத்தலைதடிந்தனன்
புக்குழிப்புக்குழிப்புலானிணக்கடல்
மிக்கவணிருந்திடவேள்விமாற்றினன்
அக்கணத்தடைந்தனனயனுமென்பவே. (௩க)

வீரனையடைந்தவன் விரைமலர்ப்பதம்
ஏரணிமலரினானிறைஞ்சியேத்தியே
யாருனைப்பொருவுகிற்பாரிம்மாட்சியால்
தாரணிவயிற்றக்கன் றன்னைக்காத்தியால். (௯௨)

என்றயன்வழிபடற்கிரங்கியெம்பிரான்
அன்றவன்றலைதனக்காட்டின்வன்றலை
ஒன்றிடநிறீஇயவனொல்லைநீங்கினன்
மன்றலந்தாரினான்மரபினென்பவே. (௯௩)

சிந்தையுமொழியுஞ்சென்றெய்தரும்பிரான்
அந்தமிலின்பவீடானகயிலைவெற்
பந்திலன்னவனருணிலையடைந்தனன்
கந்தரநீலமார்கடவுண்மைந்தனே. (௯௪)

கண்ணிழந்தலமரும்பகனுங்கண்ணுதல்
புண்ணியமலர்க்கழல்பொருந்துமுள்ளமே
நண்ணியததீசிமுன்னாட்டுங்கட்டுரை
எண்ணிடின்முற்செயுமிருந்தவத்தினால். (௯௫)

தருணமாமதிபுனைதாணுநிந்தையாஞ்
சிரவணவினையினைச்சிக்கென்றெய்தினேன்
ஒருகழுவாயிதற்குதவவேண்டுவ
தரியதேயெனத்தனதுள்ளத்துன்னினான். (௯௬)

வேறு.

கைத்தலத்தெழில்வளைபுனைகார்த்திகைமுதலாம்
உத்தமப்பெரும்பெண்டிராமுடுக்கணத்தவரும்
அத்திரிக்கனசூயைபாற்றோன்றுமாலோனுஞ்
சித்தியெய்தினர்முல்லையைத்தொழுதெழுஞ்சிறப்பான். (௯௭)

மடங்கெடுத்துயர்நெஞ்சினாற்பகன்வடமுல்லை
இடந்தனிற்சென்றுகண்டிரும்பிறந்தைவேரறுப்பான்
குடங்கையிற்கனியெனத்தனைக்குறித்தருள்சித்தித்
தடங்குடைந்தொருபாசுபதேசனைத்தாழ்ந்து. (௯௮)

சித்திரமத்தியநாயகிதனைச்சிந்தனைசெய்திட்
டத்தலந்தனையிடைவிடாதணுகிநின்றேத்த
மத்தமாமதிசூடியமஞ்சனுமுமையோ
டுய்த்துவெள்விடைமற்றவற்கூயுரைசெயுமால். (௯௯

நீசெய்பூசனைக்குளமகிழ்வுற்றனநினது
பாசவேரறுத்தாண்டனம்பரிவொடுநம்மை
ஆசிகர்திவண்வழிபடுந்திறத்தினானருக்கர்க்
கீசனாதிநின்பெரும்பவமிரிந்தனவின்றே. (சய)

அஞ்சலஞ்சனின்பதந்தனையடைந்துநின்றடைவே
எஞ்சலின்றியீண்டிராப்பகலிகந்துநின்றொழில்செய்
தஞ்சபூதமுமுகும்பொழுதமலநல்வீடு
மஞ்சநீபெறுவாயெனமகிழ்வினோடுரைத்தான். (சக)

பகனுமாபதிதோன்றிநின்றுரைத்தமைபார்த்துப்
பகரொணாதவோரானந்தப்பரவையிற்படிந்து
நகமடக்கொடியொடுமொருநம்பியுமெய்தச்
சகமிசைத்தமியேன்செய்ததவமென்கொலென்னா. (சஉ)

வேறு.

பூதரவில்லாய்பூமகனாதன்புணர்கிற்கு
நீதநிலாவாழ்சேகரநின்னேடுநர்நெஞ்சப்
போதுறைகிற்பாய்போதனபாதாபுலையேனோ
ராதரவில்லேனென்றெளிவந்தாயருளென்னே. (சங)

கஞ்சனுமாலுங்காணருமோர்சிற்கனமன்றி
னஞ்சனகண்ணாளிஞ்சுனைநாடநடஞ்செய்வாய்
வஞ்சவெளிக்கண்மேயினைநீயுண்மகிழ்வெய்தி
யஞ்சலையென்றேயிங்கெளிவந்தாயருளென்னே. (சச)

மாண்டுபிறந்திங்கேயுழலாமைமனநாசம்
ஈண்டுறநீயீண்டினையினிதெந்தாயெவருன்னைக்
காண்டகுபேறெய்துவர்மணிகண்டாசலைநாடு
மாண்டகைநீமேயினையெளிதுன்றனருளென்னே. (சரு)

உம்பருநாடியோர்வரியாயுன்றனையென்று
மன்பினினாடநன்றருள்செய்வாயடியேனுன்
செம்பதுமத்தாளல்லது துணையுஞ்சிறிதோரேன்
அம்பிகையோடுநீயெளிவந்தாயருளென்னே. (சசு)

வேறு.

என்றுதோத்திரம்புகன்றிடும்பகன்றனக்கெம்மான்
அன்றுநல்லருள்புரிந்தபினகிலமீன்றுடைய
துன்றுமாமலர்க்குழலொடுதொல்விடையூர்ந்து
நின்றதன்னுருக்கரந்தனனெறிமையினம்மா. (சஎ)

முன்னரிப்பதிவயினமுதாகரன்முராரி
தன்னமும்முணராப்பெருந்தகைதனைநாடிப்
பொன்னவாமலர்த்தடந்தொட்டவாறுபோற்புரிவி
னின்னறீர்தரத்தன்பெயராற்றடமெடுத்தான். (சஅ)

எம்பிரான்கழலேத்திநின்றெந்தைதன்விடைபெற்
றும்பரெய்தியாங்கோதுறுமருக்கரிஞேங்கித்
தம்பிரான்முல்லைத்தடம்பதிதனையுளமறவா
தன்பிஞேங்கினன்பகனெனுமருக்கனுமடைவே. (சகூ)

அன்பினற்பகலோன்செயும்பூசனையறைந்தாம்
என்பொலாமணிதனையெழிற்காருத்தனின்ற
மன்பெருஞ்சுதர்மாண்பினலருச்சனைபுரிந்த
வன்புகீடியகாதையையறிந்தவாவகுப்பாம். (ரு0)

கதிரவன்றுயர்நீங்குபடலமுற்றிற்று.

---

# குசலவர் பூசனைப்படலம்.

கார்நாடும்பைம்பொழில்கள்கலைநாடும்பல்கழகம்
தார்நாடுஞ்சுரும்பினங்கடமைநாடுமதர்விழிகள்
ஏர்நாடுமணிநாளுமினனுடுமெஞ்ஞான்றும்
நீர்நாடுதனைநிகரா நிலவியகோசலநாடு. (க)

நகரமணங்கெழுமைம்பாற்றகையணங்களுரென்றும்
புகரின்மலர்க்கற்பதனைப்புரக்குநீர்மையினிலவி
அகரமெழுத்தனைத்துமுதலாயவாறெனமரபின்
நகரமேழினுஞ்சிறந்துநலனுறுமயோத்திநகர். (உ)

பொன்பூத்தமணிமாடம்பொலிதருமந்நகர்ப்பெருமான்
கொன்பூத்தநெட்டிலைவேற்குலவேந்தர்தம்பெருமான்
தென்பூத்தசில்லியந்தேர்தசாதிசையுஞ்செலுநீர்மை
மன்பூத்தகாரணத்தான்மருவியபேர்வனைந்துடையான். (ங)

காண்டகுநல்வனைப்பெய்துங்காரிகையாரொருமூவர்
மான்புடைமாமனைவாழ்க்கைத்துணைவியராகவுமவர்பால்
ஆண்டகைதானேர்மகப்பேறில்லுகவருந்தவமே
பூண்டவசிட்டனைக்கொண்டேபுந்திதெருண்டிதுபுரிவான். (ச)

உரோமபதனுவந்தளிக்குமொருமடமாக்கொடிமணந்த
தராதலமேதுதிக்குமருந்தவராசசிகாமணியாம்
பராவருஞ்சீர்க்கலைக்கோட்டுமாமுனிவன்பதியெய்த
விராவருநண்பானவனைவேண்டியேவிழைந்திரந்தான். (ரு)

அவ்வேந்தன்முனிவனொடுமணங்கனையாளொடுமணையத்
தெவ்வேந்தர்பகைதுமிக்குந்திறல்வேந்தர்பெருமான்வாழ்
எவ்வேந்தர்திறைகள்கொணர்ந்தெய்துநகர்க்கெதிர்கொண்டான்
அவ்வானத்தவரெல்லாமலர்மாரிமிகச்சொரிய. (சு)

அம்முனிவன்றனைநோக்கியருட்கடலேநின்னருளாற்
றெம்மடங்கவெவ்வுலகுந்திறத்தினோம்பினனெற்பின்
அம்மடங்கிவ்வுலகோம்புமரும்புதல்வற்பெறினென்போ
லெம்மடங்கின்புடையாருமிலைசரதமிதுவென்றான். (எ)

அம்மொழியவ்வேந்தர்பிரானடைவினுரைத்திடக்கேட்டு
மெய்ம்மொழியாமெனத்துணிந்தவேதியர்தம்பெருமானும்
மும்மையுலகும்புரக்குமுதுக்குறைவினொருமகவை
நன்மகத்தின்வழிதருவாநாமொழிதியெனப்புகன்றான். (அ)

அப்பரிசேமகப்பேற்றுக்கானமகந்தனைக்குயிற்ற
ஒப்பறுசீர்ச்சுவணமயத்தொருதட்டிலோர்பூதம்
அப்புடையேவானடிசில்துதலைமேற்கொண்டெய்த
மைப்படியுமணிமாடத்தயோதியர்கோன்மனமகிழ்ந்தான். (கூ)

அன்னமன்னனைநோக்கியார்வத்தானருந்தவனும்
இன்னடிசினின்னில்லக்குரியவர்தாமேமிசைக
ஒன்னலர்தாழ்மணிமுடியாயுவர்மதலைபயப்பாரால்
என்றின்னறெறவவனுக்கெடுத்தோதிநிறுவினனே. (கo)

அவ்வண்ணமரையர்பிரானுங்கவர்மூவருக்கன்பாய்ச்
செவ்வண்ணம்புரிந்தளிப்பச்செங்கைவளக்கோசலையு
பைவண்ணப்பூணணிகைசயன்பயந்தபாவையுமம்
மைவண்ணக்கோதைசுமித்திரையுமரபினினயின்றார். (கக)

மூவருக்குநாற்கூறுமுறையினளித்திடவயிலத்
தேவருக்குமுனிவருக்குந்திரைகடல்சூழ்நிலவரைப்பில்
ஏவருக்குமிரும்பகையாமிராவணனைவெலத்தோன்றும்
நாவிருக்குமறைப்பொருளாநம்பியைக்கோசலைபயந்தாள். (கஉ)

பரிதிதனைத்தன்னுருவாப்பரித்தானைப்பாம்பணையான்
கருதலரைச்செகுத்தானைக்கரமலர்நின்றகலானை
அரிதிருவமனையானையமலன்றனுணையென
வருமொருவன்றனையன்பாய்க்கைகேசிவழங்கினளால். (கங)

சென்றுலோரெழிற்குடையாய்ச்செறிந்திருப்பவாதனமாய்
நின்றுலோர்பாதுகமாய்நெடும்பரியங்கமதாகிப்
பொன்றுனேயென்னுள்ளப்புண்டரிகமேயானே
நன்றுருமனத்திளேயநங்கைபவளும்பயந்தாள். (கச)

பஞ்சசனனெனுமரக்கன்படிவமாய்க்கடலகத்தே
செஞ்செவேகிடந்திறைவன்றிருக்கரமேபொலிந்தானே
அஞ்சுவணநிறத்தானேயவன்வென்றிவயிற்குறிக்கு
மஞ்சனேயும்பயந்தனளம்மடவரலன்பினினம்மா. (கரு)

வேறு.

மைந்தர்நால்வருமரபினிற்றேன்றிடமன்னன்
அந்தவானமிழ்தயின்றனனெனவகங்குழைந்து
சந்தமாமலர்ச்சரயுநீர்படிந்துதாழ்வறுசீர்
அந்தணளருக்கரும்பொருள்வித்திடைளித்தான். (கசு)

எமக்குமெம்மைமயேபொருமெழின்முனிவரராவார்
தமக்கும்வானவர்தமக்குமேம்படுமுளத்தக்கான்
உமக்குமேயலதெவர்க்குமேயுவப்புறுநலத்தான்
இமைக்குங்கண்ணிவற்கிராமனென்றிடுபெயரென்றுன். (கஎ)

ஏகவானரசிமையவரிறையிளவலொடும்
போகநீள்சுரம்புண்ணியம்பூத்ததேபோலும்
மாகமேவழுத்தொருவனின்னலதுமற்றறியேன்
ஆகவென்றலும்பரித்தவற்பரதனென்றழைத்தான். (கஅ)

நிழலெனத்தம்முன்றனேவிடாதொருநெறிநின்று
பழுதில்சீரயோத்தியைவிடுத்தழற்கடம்பருவில்
செழுமலர்க்கரத்தேந்தியேசெல்லுமச்செம்மற்
கழிவில்பேரிலக்குவனெனவமையுமாலென்றுன். (ககூ)

அரசிராகவன்பொறுத்தலுமவன்றனேநேர்ந்த
விரவலாரையுந்தன்னகமேவிநின்றெறுத்துப்
பொருதுமோரறுவரையிவணறுவராய்ப்பொருச
ஒருவனேப்பெயரிடுசத்துருக்கனென்றென்றுன். (உ0)

இன்னவாறவர்க்சேய்வதோர்நாமமேயிட்டு
மன்னுமாதவவசிட்டனும்வயங்கிரலேயின்கோட்
டன்னமெய்த்தவனுந்தமதிருக்கையையணுக
மன்னன்றுனுந்தன்மரபுளிக்கருமமாற்றினனுல். (உக)

வேறு.

நிறைமதிநீரநெடுந்தகைமைந்தர்
தறைசெய்பெருந்தவமென்னவளர்ந்தார்

மறையொருநாலின்வயங்கிடுநீரார்
இறையுமிவண்பிரிவெய்திலர்நின்றார். (௨௨)

மன்னவர்மன்னனன்மதலையரொல்லை
உன்னருமாமறையோதியுணர்ந்து
வின்னெறிமுற்றும்வியப்பவறிந்திட்
டென்னிவரொப்பவரில்லெனநின்றார். (௨௩)

இன்னவரின்னணமெய்தியஞான்று
மன்னன்மருங்குவயங்குசினந்தான்
என்னுமுருக்கொடிணங்கிநடந்தா
லென்னவடைந்தனனேமுறுமாண்பான். (௨௪)

கோசிகமாமுனிகோவினையண்மி
ஆசிகள்கூறியரிந்தமனைத்தந்
தேசறுதாடகையேமுதலாயோர்
தேசுறுவானிடைசேரவிடுப்பாய். (௨௫)

என்றுயிரேற்றிடுமெண்ணருளில்லா
வன்றிறற்கூற்றெனவந்தவணேற்ப
அன்றவயிற்படைமன்னுயிரற்றா
ரென்றுநிலாவியெடுத்திதுசெப்பும். (௨௬)

மாதவகேண்மதிமாதவனீரெட்
டோதுறுமாட்டையனல்லனுவன்றான்
போதனகண்ணன்பொரற்கெழுகென்ற
லேதினிசாசரர்பாலிவணென்னே. (௨௭)

என்றவம்மன்னனியம்பியசொற்கேட்
டொன்றியசீற்றமுளத்திடைபொங்க
நன்றுநின்செய்கைநினன்மகன்மேன்மை
நின்றறிவேனொருநீயறியாயால். (௨௮)

என்னவருந்தவனெய்தியகோபம்
தன்னையுணர்ந்ததனித்தவசிட்டன்
மன்னனைநோக்கிநின்மைந்தனுக்கின்றே
நன்னலமெய்துதனாடிலையென்றான். (௨௯)

அவ்வுரைகேட்டவயிற்படைமன்னன்
தெவ்வடுவேல்வலசேவகனைச்சென்
றவ்வயினொல்லையழைத்திவனைக்கொண்
டெவ்வமுறுங்கொடியாரடுகென்றான். (௩௰)

தம்பியொடுந்தனிமாமறைகூறும்
நம்பியருந்தவனல்லகுறிப்பின்
வெம்புறுகானிடைமேவினன்மேவி
உம்பர்தொழும்பொழிலொன்றினையுற்றான். (நக)

வேறு

பரவியசித்தாச், சிரமமெனும்பேர்
மருவியசூழல், தெரிதிகொலென்றான். (நஉ)
இம்மொழிகூறு, மம்முனிவன்முன்
செம்மையிருடகை, யும்மெதிருற்றாள். (நந)
நீர்முகிலன்ன, ஞரெனலோடும்
சூர்மகணுடிய, போரடுகென்றாள். (நச)
பகழிவிடுத்தே, தகவினழித்திட்
டுகவையினக்கான், இகலொடடைந்தான். (நரு)
ஆதிமுதல்வன், காதிசுதற்கூய்
மாதவவேள்வி, நீதுணிகென்றான். (நசு)
அன்னவனுடி, முன்னுறுமாமக
நன்றுகுயிற்றிட, ஒன்னலருற்றார். (நஎ)
தம்பியோடெந்தை, அம்பினையேவி
உம்பரைமேவ, வன்புபுரிந்தான். (நஅ)
அமரரறிந்திட், டமைவினடுங்கோல்
நமதிறைவற்கீ, யமர்செயவென்றார். (நகூ)
நற்றவனல்கப், பொற்றபடைக்கல
முற்றனவெல்லாம், பெற்றனனன்றே. (சo)
மாமுனியோடும், கோமகனன்பாற்
காமருமிதிலை, யேமமொடுற்றான். (சக)
செல்வுழியெம்மான், கல்லிடையேதன்
நல்லபதத்தூள், ஒல்லையினுறவே. (சஉ)
அகலிகையென்னச், சகமிசைமேவப்
புகலிவராரெற், ககமதுனநந்தே. (சந)
என்றவம்மாலுக், கன்றவள்சீரை
நன்றுரைசெய்தா, ஞென்றியநல்லோன். (சச)

வேறு

மாமுனியொடுங்குமரர்மாமிதிலைமேவி
நாமருபுகழ்ச்சனகன்மாமனையைநாடிப்
போமறுகினெந்தைபுவிசெய்ததவமென்ன
லாமருமறைக்கொடியையன்பினொடுகண்டான். (சரு)

நங்கையவளுங்கடலினாகணையகன்று
செங்கைதனில்வில்லொடுசெறிந்தமுகிறன்னை
அங்களவிலன்பினொடுகண்டனளகன்றான்
எங்கள்மறையோன்பின்வருமெண்ணருகுணத்தான். (௪௬)
சென்றெழில்விதேகநகர்சிக்கெனவடைந்தே
அன்றவன் மகிழ்ந்துசெயுமானவுபசாரம்
நன்றுகொடுநம்பியிவனாரெனநயந்தே
துன்றுமுடியோற்குமுனிசொல்லுமினிதன்றே. (௪௭)
நாடுபுகழ்சாறயரதன்சிறுவர்நால்வர்
ஈடுமெடுப்பில்லவரிவர்க்குண்முதலோனத்
தாடகையைவென்றெமதுதாழ்வறவுனாற்றிப்
பீடுறுமகத்தொழில்செய்பேருதவிசெய்தான். (௪௮)
மன்னவவிவன்வரவுன்மங்கையைமணப்பான்
தென்னவனொவுலகமாண்டசிவன்வில்லைத்
தன்னதுகரத்தினிறுப்பனதுதன்னை
முன்னறியெனத்தவனுமுன்மொழிவதானான். (௪௯)

வேறு.

இருவரம்பினிலெவரும்பழிச்சுறும்
மறுவறுமனுவுருவாய்ந்தவள்ளன்முன்
அறுபதினாயிரரரசனாணையாற்
செறிதிணித்தோள்கொடோர்சிறையினிட்டனர். (௫௰)
கோமுனிகுறிப்பினாற்கொண்டல்போல்பவன்
மாமலைபொருசிலைவயங்குகைத்தலத்
தேமுறத்தொட்டனனிற்றதேயெனின்
யாமவணிகழ்ந்தமையியம்பற்பாலதோ. (௫௧)
அரசனுங்கோமுனியாணையான்மத
கரிவளத்தானையான்கடவுண்மாநகர்
பரிவொடுந்தூதுவரெய்தப்பண்ணினான்
திருமுகங்கைக்கொடுசென்றுசேரவே. (௫௨)
மன்னவர்மன்னனும்வசிட்டமாமுனி
தன்னொடும்புரசனர்தாமுமெய்திடப்
பொன்னனகுணத்தொருவிதேகன்பொன்னகர்
முன்னிவந்தெய்தினான்முதிருமன்பினான். (௫௩)
பங்குனியுத்தரம்படர்ந்தவேலையிற்
செங்கணான்சனகியைத்தீமுன்வேட்டனன்
அங்கவன்கரத்திடையன்பிற்பெய்தனன்
மங்கலமரபினின்வயங்குசீரரோ. (௫௪)

இக்கொடியென்மகளிருந்தவத்துறை
ஒக்கநின்றியற்றுவாளுவளொடொன்றிநீ
அக்கலைமதியுரோகணியெனச்சொலத்
திக்குறுசீரிணுய்திகழ்கவென்றனன். (ருரு)

மாதவன்சனகியைமரபின்வேட்டபின்
கோதறுகுணத்தொருவிதேகர்கோன்றரும்
மாதினையூர்மிளையெனுமடந்தையைக்
காதலினிலக்குவன்கடிதயர்ந்தனன். (ருசு)

சனகன்பின்வருகுசத்துவசன்முன்றரும்
பணிமதிமுகத்துமாளவியைப்பைங்கழைக்
கனிமொழியெனுஞ்சுதகீர்த்தியைக்கனிந்
தனகனுக்கிளைவரையடைவின்வேட்டனர். (ருஎ)

இன்னணமணமயர்ந்திருந்தவேலையின்
மன்னவர்மன்னனுமிதிலைமன்னன்மாட்
டொன்னலர்தாழயோத்தியினையுற்றிட
நன்னயவிடைபெறீஇநடந்திட்டானரோ. (ருஅ)

சாதுரங்கத்தொடும்வசிட்டன்றன்னொடும்
சீதைமுன்மருகியர்சேர்ந்தணைந்திடக்
கோதைவிற்குமரனுங்கோதில்கோசலை
ஆதியரெய்திடவகன்றிட்டானரோ. (ருகூ)

நடையிற்கண்டனவைமிகுந்திடுந்
திடமிகுநிமித்தமதறிந்தசெம்மலும்
மடனிகவுணர்ந்தவர்க்கேட்பமற்றவர்
இடரிலையாகுமாலென்றுகூறினர். (கூ0)

கூறியதுணையினிற்கொடியபேரொலி
பாறணவாட்கரப்பகீரதன்குலத்
தேறனுன்கேட்டிவணெய்திற்றென்னென
மாறடுமழுக்கையான்வந்துற்றுனெனு. (கூக)

உரைத்துழியன்னவனுலகமேங்கிட
விரைத்துழாயலங்கலான்விழிப்புலக்கெதிர்
வரைக்கொடிமணாளன்வில்லிறுத்தமாண்பினுற்
றரைத்தலஞ்செருக்கினிற்றலைப்பட்டாயென்முன். (கூஉ)

என்றுரைவழங்கியேயீதுமாயவன்
றன்றிணிகரத்துழைச்சாரும்வில்லிதன்
மன்றிறமுணர்தியென்றுரைத்துமாதவன்
வன்றிறல்வில்லவன்வலக்கைநல்கினுன். (கூஙு)

இராகவனேற்றதற்கிலக்கமாவது
பராவருநலத்தபணித்தியென்றலும்
விராவுதன்றவமெலாம்விடுத்துநின்றவன்
நிராமயனென்பதுநிறுத்தியேகினான். (சுச)

மரபினின்வாங்கியவயங்கும்வில்லினை
வருணன்பாற்சேமியென்றிறைவழங்கியே
கரிபரிமுதலவாந்தானையங்கடல்
விரவிடவயோத்தியைமீட்டுமெய்தினான். (சுரு)

கேகயன்பரதனைக்காணுங்கேண்மையான்
ஓகையிற்றூதரையொல்லையேயினான்
நாகணையவன்றன்பினல்லதம்பியோ
டேகினான்விடைபெறீஇயிரதமூர்ந்தரோ. (சுசு)

தன்னகர்க்காவலைத்சந்திரமனை
மன்னவனுக்கிடமன்னனுன்னினான்
அன்னதைக்கூனியோர்ந்தரசிபாலணந்
தின்னலிங்குற்றுதற்கெண்ணினாளரோ. (சுஎ)

பூமகள்பொருவுகற்புடையபூவைகேள்
நாமகள்கொழுநனையீன்றநம்பிதான்
வேமகன்கானிடைமேவநின்மகன்
கோமகனுவரங்கொள்கென்றோதினாள். (சுஅ)

தேந்துணர்த்துளவினத்தேவர்கோவினை
யேந்தலைக்கானகமேகுகென்றனள்
நாந்தகவிழியினணல்லசீரையும்
ஆந்தகவளித்தனரிகுலோமாரரோ. (சுகூ)

இன்னசொற்கேட்டவவ்விலக்குவன்குல
முன்னவனிராகவன்முன்னர்க்கற்கடந்
தன்னையேநாடியதானணைந்தனன்
அன்னையாஞ்சனகியுமடைவினேகினாள். (எ0)

சானவிக்கரையணைந்தமலன்றானுமக்
கானவர்கோன்குகன்கலன்விடுப்பவே
வானுலாஞ்சித்திரகூடமால்வரைத்
தேனமர்சோலையைத்தேடியெய்தினான். (எக)

தம்பியுமிராமனுஞ்சனகியோடுமவ்
வெம்பியகானகமேவிநின்றமை
பம்புசீர்த்தயரதன்கேட்டபான்மையான்
அம்பரமேகினானகரீத்தரோ. (எஉ)

சுமந்திரன்வசிட்டனேமுதலதொன்மையோர்
தமந்திரண்டாலனதண்மலர்ப்பொழில்
அமைந்தகேகயத்திருநாடணைந்திடச்
சமைந்ததூதுவர்தமைத்தாமும்போக்கினார். (௭௩)

கண்டனர்கேட்டனர்கனகத்தேரின்மேற்
கொண்டனரணைந்தனர்கோவகன்றமை
ஒண்டொடித்தாயினோர்ந்துழுவலன்பினார்
புண்டரீகக்கணீர்பொழியநின்றனர். (௭௪)

தம்முனுந்தம்பியுஞ்சனகியுங்கட
மம்மரபினினடைந்தமையறிந்தனர்
செம்மலுக்கேய்கடன்செய்துமேவினர்
மைம்மலிபொழிற்சித்திரகூடமால்வரை. (௭௫)

பரதனுமிளவலும்பரிந்தடைந்தமை
வரதனுங்கண்டுமன்னவர்பிரான்புக
ழுருநிறீஇச்சென்றமையொல்லையோர்ந்துதன்
இருகையாற்செய்கடனியாவுஞ்செய்தனன். (௭௬)

இராமனைத்திருநகரெய்துகென்றவற்
பராவிநின்றழைத்திடும்பரதன்றன்னையான்
விராவருகானகமேவிமீள்வனாற்
றராதலங்காத்தனின்றனக்குரித்தென்றான். (௭௭)

பாதுகமளிப்பவப்பரதன்கைக்கொடு
மேதகுமயோத்தியைமேவலின்றியே
கேதநீத்திடுநந்திக்கிராமமேய்ந்துதன்
தாதைபோல்வானிலைதான்கொண்டானரோ. (௭௮)

இவ்வயினிங்கிவணிருப்பவேந்தலும்
கவ்வையிற்கடநெறிகடந்துசென்றவ
னெவ்வயினோரும்வந்திறைஞ்சியேத்துறுஞ்
செவ்வழியோருறைவிடஞ்சென்றேகினான். (௭௯)

அத்திரிபோனெடுமாடயோத்தியான்
மத்திரிதயிரெனமனங்கலங்குருச்
சித்திரவிற்கையஞ்சேவகன்றவத்
தத்திரிவாழியவடவியேகினான். (௮௦)

அங்கவனுறைவிடமடைந்தசேவகன்
பொங்கியகாதலான்பொருவின்மெய்த்தவ
எங்களுக்கருள்விடையெனவவன்புடை
தங்கனசூயையாந்தாயும்போந்தரோ. (௮௧)

# குசலவர் பூசனைப்படலம்.

சனகியைவாழ்த்தியத்தையலாள்பெறப்
புனைகலன்றாசுநல்கிடப்புரிந்தவ
டனைநனியிறைஞ்சினாடன்னொடேமவில்
அனகனுந்தம்பியுமவணகன்றனர். (௮௨)
விவ்விராவியகுழலவள்வெதும்புறத்
தெவ்விராமனத்தொடுஞ்சேண்டிரிந்தவவ்
வெவ்விராதனையிராவகையின்வீட்டினான்
இவ்விராகவனிமையோருமார்ப்பவே. (௮௩)
தண்டகவனந்தனைத்தகவினெய்தியே
அண்டரும்பரசுமவ்வந்தணார்கள்
கொண்டுசென்றவர்கடங்குறைகள்கூறிடப்
புண்டரீகக்கணான்புரத்துமென்றனன். (௮௪)
மாதவர்சூழலையகன்றமாதவன்
ஓதநீரொருகையினுண்டமாதவப்
பூதரமனையவன்புரிந்துவைகிய
பாதவம்பொலிபொழில்பையவெய்தினான். (௮௫)
அமரர்கள்வழிபடுமமருமாதவன்
குமரநீயணைதருங்கொள்கைசாற்றிட
அமைதருமோவெனாவவனுக்கன்பினான்
அமைவில்பல்படைக்கடலனைத்துநல்கினான் (௮௬)
பெற்றபினவண்விடைபெற்றநாயகன்
சற்றுணைநாடியதம்பியோடுமுப்
பற்றிகந்தாருறைகிற்கும்பான்மையாச்
சொற்றபஞ்சவடியாஞ்சூழலெய்தினான். (௮௭)
நடவையிற்சடாயுவைநண்ணியாங்கவன்
கடவதோரன்புபூண்டிலகிக்காகுத்தன்
மடமயில்புடைவரமற்றத்தம்பிசெய்
இடனுடைச்சாலையினிதினெய்தினான். (௮௮)

வேறு.

மாதாவனையார்மருவும்பொழில்வாய்
காதார்படைக்கையனிராவணன்வாழ்
போதாயினபோதலுறும்பரிசே
ஈதாமெனவெய்தினளெண்ணமிலாள். (௮௯)
அனகன்றனைநாடியடைந்திடுசூர்ப்
பனகைப்பெயராள்பரிவேதுமிலாள்
துணியுற்றமனத்தவள்சூர்ப்பிணைபோல்
தனியுற்றெவனுந்தடையின்றடைவாள். (௯௦)

பூவாளியனங்கன்விடப்பொருமி
ஆவாவிவணேதுசெயற்கமைவேன்
காவாயெனவுங்கடிதெய்தினளால்
தேவாதிபனூர்செறிசூழலரோ. (கூக)

கண்டாளொருகாமன்விடுங்கணையாற்
புண்டானுறுகின்றதுபோரின்வலாய்
எண்டான்பிறிதில்லையெனுவயர்வாள்
விண்டாள்விரைவாள்விளிமேவுறுவாள். (கூஉ)

பஞ்சேயனபாடுபடும்பரிசாள்
நஞ்சேயனகாமநலித்திடநான்
உய்ஞ்சேனெனதாருயிருய்ஞ்சிலதென்
றஞ்சாதுரைசெய்தலமந்திடுவாள். (கூங)

வேதாவழிவந்தவிழுத்தகையேன்
மேதாவியர்நாடியமெல்லியல்யான்
யாதேயிவணேதுவலென்றுளனஞ்
சோதாதனவோதியுலைந்திடுவாள். (கூச)

பொன்னூடியர்நாணுறுபோதமிலாள்
என்னூதனையெந்தையையெய்தலுமே
அன்னூனிவனூறொனவன்பினொடுஞ்
சொன்னாளவடோன்றியவண்ணமெலாம். (கூரு)

அரசன்றருசேயருமாமறைதேர்
தருமந்தணர்பாவைதனைச்செறிதல்
மரபன்றெனவாய்மொழிதந்தனனத்
திருவொன்றுமுரத்தொருதேவர்பிரான். (கூசு)

எனநின்றுரையாடியவெல்லையினங்
கனகன்றனையேயகலாதுறைவாள்
தனயன்பொடுகண்டனடாழ்வுறுசீர்
புனைவிண்ணவர்முற்புரிநல்வினையான். (கூஎ)

சனகன்றருதையலைமேவலினூன்
அனகன்கொடியேனையணைந்திலனூல்
எனையிஞ்சுரைசெய்வதெனூவினைவாள்
தனையங்கணகன்றனடானுமரோ. (கூஅ)

நிசியங்கவணீலவிடம்பொருவச்
சசியெய்திடவுந்தளர்வாண்மெலிவாள்
விசுவந்தனைநல்கியவிண்ணவனும்
விசையிற்செலும்வெங்கதனல்கினனே. (கூகூ)

தென்றால்கொடியாயெனுந்தென்றமிழின்
குன்றேதரவந்தனைசோதருநிற்
கென்றுணிவணெய்தியதிக்கொடுமை
நன்றாலெனுநல்லுணர்வோய்ந்திடுவாள். (௪00)

வேறு.

இன்னவளிவ்வாறின்னலினுள்ளத்திணைகின்றாள்
தன்னையளிப்பத்தாமரைநண்பன்றனிபாழி
மன்னுநெடுந்தேரூர்ந்தினிதெய்தமகிழ்வுற்றே
கொன்னவில்வேலோன்றன்னுழைவந்தாள்குறைதீர்வாள். (௧0௧)

வந்தவளிறையற்றந்தனைநாடிமலர்மேவும்
பைந்தொடிதன்னைக்கொண்டகல்வேனென்பதுநண்ணி
அந்திலடைந்தேசூழ்ந்தனண்மற்றவ்வரவங்கண்
டெந்தையைநாடுந்தம்பியடைந்தானினறீர்ப்பான். (௧0௨)

நேர்ந்தாளிங்குற்றவளோரரக்கிநிலனன்பு
கூர்ந்தேநல்கும்பூங்கொடிதன்னைக்கொடுபோதத்
தேர்ந்தாளென்றேமுலையொடுமூக்குஞ்செறிகாதும்
ஈர்ந்தானென்றுவெழிலியின்மும்மையெடுத்தார்த்தாள். (௧0௩)

வேறு.

அரனார்கயிலைவரையெடுத்தவண்ணவெனுமாலவன்பின்னே
வருநேரிளையோயின்னுநீமருவினையோதுயிலெனுமால்
கரனேகரந்தாயோவெனுமால்காற்கிந்திரனைத்தளையிட்ட
மருகாவெனுமாலிதுவேநம்மரபிற்கமைந்தபழியெனுமால். (௧0௪)

ஒருநங்குடிக்கேபழிவிளைத்தானேங்கலனதோள்பார்த்திருப்பப்
பொருதன்னைவென்றிடநீர்போதந்திலிரோவாவெனுமால்
திருவமனையவொருத்திதனைத்தீண்டவிதுசெய்தானுலைய
வருவிரெனுமாலீதுமக்குமரபோவெனுமாலுறுகுறையான். (௧0௫)

மும்மைஞாலம்வெருவருமெம்முதல்வாவெனுமாணிற்பின்வருஞ்
செம்மையுலந்ததோவெனுமால்செகமுஞ்சிரிக்குமினியெனுமால்
எம்மையிருகைபிடித்தீர்த்தானிருக்கத்தகுமோவிதியெனுமால்
இம்மைநலிந்தேனனியென்றேயிடரினல்மந்துழிதருவாள். (௪0௬)

என்றுபொருமிபழுதிரங்கவிருகைவேழமனையமழக்
கன்றுபோல்வான்காகுத்தன்கடமைபுரிந்தாங்கெய்தலுமே
நின்றவரக்கிதனைக்கண்டுநெருநல்வந்தீர்நாமேயோ
நன்றுசொலிரிங்கடுத்தகுறைநாடிபென்றானகைமுகத்தான். (௧0௭)

குன்றேயனையபுயத்திரவிகுலத்துமருமான்கட்டுரைப்ப
நன்றேகேட்டப்பணிமொழியாளடியவற்கேயுரைசெயுமால்
இன்றாதரத்தானுமையடைந்தேற்கீதுசெய்தீரென்செய்கோ
பின்றானொருவரெமைவிழையாப்பீடுசெய்திரென்றுரைத்தாள். (௧௦௮)
அன்னபொழுதாங்கவணிகழ்ந்ததனைத்துமோர்ந்தகாகுத்தன்
மின்னினிடையாயினியீண்டுவிரவல்பொருந்தாதென்றவளை
முன்னரகலென்றுரைத்தனான்முத்தநகைமான்பொருவும்விழிக்
கன்னன்மொழியாள்கடிதுகரன்கானமருவினாளன்றே. (௧௦௯)
கரனையணைந்துற்றதுகூறக்கடற்சேனையொடங்கவனெய்தி
பொரவும்பூளைவீயென்னப்போகவவனுஞ்சேனையுமே
விரைவினகன்றுகடலிலங்கைமேவிநிகழ்ந்ததுரைசெய்தாள்
இரவிகுலத்தோர்மணிவிளக்குமெய்தினான்சாலையமன்னோ. (௧௧௦)
கொடியவரக்கிசானகிதன்கோலமெனைத்தும்விரித்தோத
நெடியகாமக்கடலதனைநீந்தவறியாதலமந்து
கடியசோலைவயினெய்திக்காகுத்தன்கைக்கணைவருத்த
முடியகில்லாதிருந்தானைமொழிந்தான்முகம்பத்துடைக்கொடியோன். (௧௧௧)

வேறு.

மானாகெனக்கட்டுரைசெய்திடவஞ்சநெஞ்சன்
தானாயினானோர்பொலன்மானெனத்தானவேசன்
ஆனானொருமாமுனியாகியணைந்துசென்றான்
கானார்குழன்முன்னடந்தன்றுகனகமானும். (௧௧௨)
கண்டாளொருசானகிகைதவமென்றுகாணாள்
புண்டானெனநெஞ்சுவருந்திப்புகலுகின்றாள்
மண்டான்புரியுந்தவமாமெனுமானைப்பற்றிக்
கொண்டேதருகென்றனள்கோதுபடாநலத்தாள். (௧௧௩)
ஓமென்றவனுமதன்பின்னடந்தோகமானும்
நாமொன்றுகானமெலாஞ்சென்றதுநம்பிதானும்
தாமஞ்செறிவில்லினாணிக்கணையானடர்ப்பக்
காமென்றுதம்பிபெயர்கூறிக்கடிதுவீழும். (௧௧௪)
பொல்லாதமாயைபுணர்த்தும்மப்பொருவிலாதான்
சொல்லேயனவெங்கணையாற்றொலைவெய்தவன்றான்
வல்லேயிடும்பொய்க்குரல்கேட்டுமலர்துறந்தாள்
நல்லோயினிகாடெனவண்ணலையென்றுநைஞ்சாள். (௧௧௫)
அண்ணற்பெரியோன்றனதாற்றலவனுரைப்பக்
கண்ணுக்கினியானுரமேவியகாதன்மானும்
புண்ணிற்கணையிட்டெனவெம்மொழிபுந்திநைய
எண்ணிப்புகலநடந்தானிளையோனுமன்றே. (௧௧௬)

நடந்தெய்தினனண்ணலைக்கண்டனனுமவேலோன்
மடந்தைக்கினியெய்திடுந்துன்பெனமாண்பினெண்ணிக்
கடந்தெய்தினன்றம்பியொடுங்கடங்காத்திருந்தோன்
படர்ந்தேகிடவந்தனன்பைப்பையப்பாதகத்தோன். (௧௧௭)

வைத்தண்டம்வயிற்றிடைப்பின்னதுவாங்குவாளை
முத்தண்டமேந்துமுனிபுங்கவனுமடைந்து
மத்தன்றனகண்ணிருபாலும்வயங்கிநாட
எத்திக்குநடுங்கவுமேங்கவுநின்றதம்மா. (௧௧௮)

மூன்மூக்கிழந்தாளுரைத்திட்டமொழியின்மேம்பட்
டென்மாட்டிறைவைத்தமெய்ப்பண்பெனவிஞ்சுநின்ற
பொன்மானனையாடனைக்கைக்கொடுபோதலேநன்
றென்மாதிரம்வென்றநெடும்புயக்கென்றுவந்தான். (௧௧௯)

சனகன்றருபாவையொடுஞ்சிலசாற்றியன்னுள்
புனவாயினெடும்புலிவாயகப்பட்டபுல்வாய்
எனமாமனநஞ்சிடவெம்பெருமாட்டிவைகுந்
தனியாமிருக்கையொடுங்கிண்டனன்சஞ்சலத்தான். (௧௨௦)

மாபாதகனுமனையைக்கொடுவானினேகக்
காபாலிதன்கைக்கணையாகியகாமர்வேந்தைப்
பூபாலர்போற்றும்புருடோத்தமனைப்புகன்றுள்
கோபாலனைத்தொடடைந்தான்புட்குழுஉப்புரப்போன். (௧௨௧)

வந்தானதைத்தானவன்கண்டுவயிரவாளான்
அந்தாரணியில்விழச்செய்தனனன்னையோர்ந்தென்
சிந்தாகுலமாவனவில்லிசெவிக்கணோதி
யெந்தாயுனதாவிதணந்திடென்றேங்கிநின்றாள். (௧௨௨)

கோடியானுமங்கணகன்றன்னையைக்கொண்டுசென்று
கடியாரிலங்கைநகரெய்திக்கனகவைப்பாம்
படிமீதெனச்சொற்றிடுஞ்சிஞ்சுபவனநாப்பண்
விடியாச்சிறையிட்டனன்விண்ணவர்நாகர்நைய. (௧௨௩)

ஊழிக்கடுங்காலெனவேவருமும்பலன்னான்
பாழிப்புயமேருதன்பிற்படர்கிற்பநாடி
மாழைக்கிணையாம்விழியாளேவனத்திற்காணான்
ஏழைக்கெவனுற்றதென்றேங்கினனியாருமேங்க. (௧௨௪)

கிளியொத்தசொல்லாள்கிடைத்தற்கரிதாகிநைஞ்சான்
வளியொத்துநடந்துவனம்பிறகிட்டொதுங்க
அளியொத்தசிந்தைக்கழுகிக்கிறையாகமண்மேல்
விளியொத்துலைவுற்றிருப்பத்தன்விழியிற்கண்டான். (௧௨௫)

கண்டானெழில்வேதமும்போதமுங்காண்கிலாதான்
பண்டாலிலையின்வயிற்றுஞ்சும்பரிசுநீங்கி
மண்டான்செய்தவத்தடிவைத்துநடக்கும்வள்ளல்
எண்டானுனைப்பதிவற்செய்தியதென்கொலென்றான். (௧௨௬)

பொன்னேக்கியமார்பிறைவந்தமைபோதநாடிக்
கன்னேக்கியதோட்கதிரோன்குலக்காவலோயே
மென்னேக்கியைவாளரக்கன்கொடுமேயினன்றெற்
கென்னேக்குவதென்றவனெற்புடனீத்தகன்றான் (௧௨௭)

தாதைக்குரியகடன்யாவையுந்தான்புரிந்த
போதற்பினிலக்குவன்றேற்றப்புலன்கொடெம்மான்
காதற்சனகிதனைக்கொண்டகல்கள்வனைக்கோன்
றேதப்படுநல்லிசையெய்துவதுண்மையென்றான். (௧௨௮)

என்றேநடந்துசெலுமேல்வையிராகவன்றான்
பொன்றாதநீர்வேட்கையையெய்தப்பொறாதுநின்று
பின்றான்வருவோற்கொடுவாவெனப்பேசவாங்கோர்
மின்றாழ்குழலயோமுகிதானும்விரைந்துவந்தாள். (௧௨௯)

வந்தாளைமூக்குச்செவிவார்முலைவாங்கிநின்றே
கொந்தார்துளவத்தெரியற்குலபூதரன்றாட்
கந்தாமமணிந்தவணங்கருச்சித்துநின்றான்
அந்தாமரையாற்றருமாதியகமகிழ்ந்தான். (௧௩0)

பிற்சென்றனரவ்விருவோரும்பெயர்ந்துகானிற்
கற்சென்றதோளானொருவன்மெய்க்கவந்தனென்பான்
கைச்சென்றணுகுற்றனர்காமருவீரர்வாளான்
அச்சொன்றகன்றானறவோரினகன்றுபோந்தான். (௧௩௧)

போந்தானுரைகொண்டொருபோதப்படிவமன்னுட்
சார்ந்தாரவள்சொற்படிச்சூரியன்றந்ததோன்றல்
வேந்தான்வருந்திக்கிடக்கும்வரைவேறுகாணுன்
பூந்தாமரையோனெனவோதும்பொருவிறந்தோன். (௧௩௨)

வந்தானையாரென்றலும்வாயுவின்மைஞ்சன்யான்முற்
றந்தேனையவஞ்சனையாலித்தடங்குன்றோங்கு
நந்தாவிளக்கேயெனயாருநவிலுமென்றூழ்
தந்தான்வயினற்றெழும்பேபுரிவேனெனச்சாற்றிநின்றான். (௧௩௩)

அற்றேலவனெங்குளனேசனவாங்கவற்குச்
சொற்றானவன்செய்தியெனைத்தையுஞ்சொற்றதன்றி
எற்றேபகர்வேனினையென்னலுமெந்தைநோக்கக்
கற்றார்பரவுந்திளையோன்கனிந்தோதிநின்றான். (௧௩௪)

விடைபெற்றவணேகியகன்றுவிடையதென்ன
நடைபெற்றசன்றானொருஞாயிறுமைந்தனார்கட்
கடைபெற்றனைத்துமெடுத்தோதினன்காளைதானுஞ்
சடைபெற்றசெந்நெல்வயலுடனைச்சார்வலென்றான். (௧௩௫)

என்றேயுரைதந்தொருசாம்புவனீலனெய்த
நன்றேய்தருமாருதியோடுநடந்துநீலக்
குன்றேயனையானடிசார்ந்துகுறுகலோடும்
இன்றேதவிர்ந்ததுனதின்னலெனைத்துமென்றான். (௧௩௬)

நாகந்தணந்துகடன்ஞாலநலக்கவந்தோன்
சோகந்தணந்துவிடுகென்றுதுணிந்துரைப்ப
வேகந்தருமேழ்பரியோன்றரும்வெய்யகாளை
மேகந்தனைநாடுபைங்கூழெனவீறினானே. (௧௩௭)

உண்டாயதொரையமவற்குளதும்பலன்றான்
பண்டாலிலையிற்றுயிலும்பரமேட்டியென்றே
கொண்டான்குலமாருதியான்குறிக்கின்றதொன்று
விண்டான்வெலற்காவதுகொல்விறலோனையென்றான். (௧௩௮)

ஐயத்தினின்றவவன்றன்குறிப்பாங்கறிந்த
சையத்தையொத்ததனிமாருதியிஞ்சிருந்த
மையொத்தளாயமரமேழுமுருவிநிற்ப
வையத்தவன்வாளிவிடக்கெடுமம்மரென்றான். (௧௩௯)

வேறு.

அரிந்தமன்றனைக்கொண்டவரணுகலும்மலன்
விரைந்தவண்கொடுவருவதென்னெனவிழைந்திந்த
மரந்தனைக்கொடுமரந்தனிற்சரந்தொடுத்தெய்ய
இருந்தசெம்முளனென்றனனயிந்திரமுணர்ந்தோன். (௧௪0)

கண்டுகொண்டனன்கடுத்தெமையாண்டகாகுத்தன்
புண்டரீகக்கட்புயலனையான்பொருவிறந்த
மண்டுகாதலிற்றம்பியைநோக்கிடென்வரிவில்
கொண்டுநல்குதியென்றனன்கொற்றவிலம்மா. (௧௪௧)

நாண்வளைத்தொருசரந்தனைத்தொடுத்தனனம்பி
மாண்டசீர்த்திசாறம்பியல்லவர்மயர்வுற்றார்
காண்டகச்சர்மராமரங்களினிடையெய்திக்
கீண்டுமாநிலங்கேடிலானுழையடைந்ததுவே. (௧௪௨)

கண்டயாவருங்களிமகிழ்சிறந்தனரனையோர்
விண்டகன்றனர்வந்துழிவிண்ணளாமெற்பைப்
புண்டரீகக்கட்புரவலன்றம்பியைநோக்க
வெண்டுவாவிரலானதைபெற்றிநின்றனனே. (௧௪௩)

சென்றவெற்புடம்பிருவிசும்படைந்துதிர்ந்தெய்தி
பின்றதன்னிலையுற்றதுநெடியவனோக்கி
இன்றிதன்பரிசோதெனமாருதியெனைத்தும்
அன்றுகூறியேநிரப்பின்னுங்கசன்றனரே. (௧௪௪)

வெய்யகானகமெனைத்தையுங்கடந்தனர்விரைந்து
மையளாவியசிகரிசூழ்கிட்கிந்தைமருங்கே
ஐயனோடவணணுகினரமலனும்பரிதிச்
செய்யமைந்தனைநோக்கியேசெப்பலுற்றனனே. (௧௪௫)

சென்றழைத்திடுன்றம்முனைச்செருச்செயற்கென்றான்
நன்றிராகவன்கேட்டலுஞாயிறுதந்தோன்
அன்றினார்புரமட்டவனடிமலர்த்தொண்டின்
நின்றவாலியைக்கூய்நெடிதார்த்தனனின்றான். (௧௪௬)

வந்தனன்கொடுங்கூற்றுநேர்வாலியும்வந்து
சிந்திடச்செய்தான்ஞாயிறுசேய்தனைச்செருவில்
அந்திலாங்கவனொருவழிதணந்தமலன்றன்
சந்தமாமலர்ச்சீறடியிறைஞ்சியேதாழ்ந்தான். (௧௪௭)

இரவிகான்முளைதன்னையவ்விரவிதன்குலத்தோன்
பரிவினோர்கொடிகந்தரத்திடனணிபடர்ந்தான்
உரனுறுஞ்சிந்தைவாலிபாலணையனுமுட்கித்
திருவிலானையும்வருத்தினன்றேவரும்வெருவ. (௧௪௮)

இன்னவேலையிலிராகவன்வில்லினைவளைத்துத்
துன்னுநாணெறிந்தொருசரந்தூண்டினன்றூண்டி
அன்னவாலிதன்மருமநேர்விடுப்பவுமனையான்
என்னிதென்றதைத்தன்கையாலிறுகுறப்பிடித்தான். (௧௪௯)

சரமெனும்படிதெரிந்தனன்றெரிந்தெனைத்தகைப்பார்
ஒருவரேனுமின்றாயினுமம்மவோவொருவென்
உரனடுச்செலுத்தொருவன்பேருணர்குதுமென்ன
அரிததன்றலைப்பொறித்தவத்திருப்பெயரறிந்தான். (௧௫௦)

தம்பிதன்னையும்விடுத்தனன்றன்னையுமறந்தான்
உம்பரானருளிருந்தவாவீதெனவுன்னி
அம்புவித்தலைக்குருதியினிடைப்படிந்தயர
நம்பியும்மிளையானொடுமவனுழைநடந்தான். (௧௫௧)

நடந்துவந்தகாகுத்தனைநயந்தவனோக்கிக்
கடந்தனைக்கண்டபின்றைநுன்கருத்ததுதிறம்ப
இடம்பெற்றிட்டதென்றியம்பியாங்கிருந்ததம்பியையுந்
தடங்கையாற்பிடித்திறைவநின்சரணெனவிட்டான். (௧௫௨)

பாங்கிருந்தசில்லோர்தமைவிடுத்துத் தான்பயந்த
ஓங்கலன்னவங்கதன் றனையழைமினென்றுரைத்தான்
ஆங்கவன்வரவவனையுமண்ணல்பால்விடுத்தே
தீங்கிலானிவன்றன்னையுங்காக்கெனச்செப்பி. (கரு௩)

ஐயவென்னொருவாலலாதவ்விராவணனை
வையமீமிசைவெல்லுவதில்லெனமகிழென்
வெய்யவாற்றலைப்படுத்ததுவிமலநின்கணையொன்
றையமின்றியேவென்றிடுமதற்கியான்சான்றால். (கருச)

இப்படைக்கடற்கெந்தைநின்கணையெனத்தருவோன்
செப்பமாருமஞ்சனைதருஞ்சிறுவனென்றுணர்மற்
றப்பராங்கதிதருதியெற்கென்றவன்றானுங்
கைப்புலக்கணைவிடுப்பவாருயிர்கவர்ந்ததுவே. (கருரு)

வாலிவிண்ணுறமற்றவன்றம்பியைநோக்கி
ஏலவிங்கயர்கின்றதெனிவன்றனக்கிமஞ்
சாலநீடத்தென்றுமாருதியொடுஞ்சாற்ற
ஞாலமேலவர்மஞ்சனேடரற்றினர்நலக்க. (கருசு)

தம்பியால்வனசரந்தனக்கரசனேயாகச்
செம்பொன்மாமுடிபரிதிதன்சேய்தனைக்கவித்து
நம்பியுங்கடுங்கார்வரமதங்கனல்வரையில்
உம்பலன்னவனொடும்வதிந்திருந்தனனுப்பால். (கருஎ)

வனசரங்களுக்கரசெனமணிமுடிபுனைந்த
தினகரன்சுதன்செங்கரும்பன்னசொல்லியர்பான்
மனமியைந்தவர்மயக்கிணிலாழ்ந்தனன்குரக்கின்
இனமெலாம்வரவொற்றினைவிடுத்தினிதம்மா. (கருஅ)

ஐவகைப்பெரும்பாதகத்தொன்றெனலாய
பொய்வழிக்குரித்தாமதுமாந்தியபுன்மைச்
செய்கையாழ்ந்தவத்திருவிலியயோத்தியரிறையங்
கைதிறேதியசொல்லையுமறத்துறந்தனனால். (கருகூ)

மன்னர்மன்னவன்மைந்தனுமரபினூற்றம்பி
தன்னைநோக்கிநந்தமக்குரைசெய்ததுமறந்தான்
அன்னவன்கருத்தறிந்துவாவென்றனனவனும்
பின்னவன்பெயர்ந்தேகினனவன்பெருநகர்வாய். (கசு௦)

வேறு.

பராவரும்புகழ்ப்பண்ணவனெல்வயல்
விராவயோத்திநகருறைவேந்தன்றன்
சராதலம்புகழ்தம்பிவரக்குரக்
குராவருஞ்சினங்கண்டுளனைந்தன. (கசுக)

வழியடைத்தனமால்வரைகைக்கொடு
பழிவிளைத்தனபண்ணவன்றம்பியுங்
கழலினெல்லையினுந்தினன்கார்வரை
முழுதுந்தான்றுகளாயினமுன்னரோ. (கசுஉ)

வந்தவேகமுணர்ந்திடுமாருதி
சிந்தைநொந்துதிறம்பினனாலை
இந்தமாநகர்க்கெய்திடுந்தீங்கென
எந்தைமுன்னரினையனசெய்தனன். (கசுங)

தாரைதானுந்தடுத்தனள்கண்டனள்
ஆருமேமறவாரையவன்பினான்
நீருதவுமந்நீர்மையைநீள்கடற்
பாரிலென்றுபரிவினினோதினாள். (கசுச)

என்றுகூறவிளையவன்றன்சினம்
பொன்றிநிற்பப்புலங்கெழுமாருதி
நன்றுநாடிவந்தானைநலத்தினான்
மன்றநன்றிமறந்தனிராமென்றான். (கசுரு)

அற்றதன்றீண்டலகில்படைவர
ஒற்றர்தம்மைவிடுத்தனமொல்லையில்
இற்றைநாளையினெய்துமதென்றிடக்
கற்றதம்பியாற்றக்கவனீங்கினான். (கசுசு)

மாருதியங்கதனொடுமாண்பினாற்
சாருமெல்லையிற்றான்வந்துமுன்னினான்
சூரியன்றருதோன்றலவனொடும்
ஆரியன்றனிருக்கையையண்மினான். (கசுஎ)

வந்தசேனையைவள்ளன்முன்காட்டிநின்
றெந்தையென்னைபணியென்றிரத்தலு
முந்துநாடவிடுகெனமுன்னவன்
சிந்தையோர்ந்தவன்செப்பிவிடுத்தனன். (கசுஅ)

ஆண்டகையாமனுமனைக்கூவியே
வேண்டியேகுவிழைந்தவாசிக்கென
நீண்டவன்விறலாழியுநேரிழைக்
காண்டுணர்த்தடையாளமுநல்கினான். (சகுக)

பெற்றவஞ்சனைபெற்றமகன்விறல்
உற்றவாலியுதவுசேய்பிற்படர்
சுற்றுநீலனற்சாம்பனுறப்படை
சுற்றிடத்தென்றிசைசெலத்துன்னினார். (கஎ௦)

இன்னவாறகன்றேகுழியாங்கனும்
அன்னைவாழிடமாருமறிந்திலர்
மன்னுதென்கடலூற்றுமகேந்திரம்
என்னுமால்வரையெய்திநின்றாரரோ. (களக)

என்செய்வாமெவணுங்கண்டிலேமெழிற்
பொன்செய்மேனிப்பொலங்கொடிக்காகவே
மின்செய்துண்டத்துமேலோன்சடாயுபோல்
வன்செயற்கொலையெய்தன்மரபென்றார். (களஉ)

அன்னகாலையடைந்தனனன்னவன்
முன்னர்வந்துமுளைத்தசம்பாதியென்
பின்னவன்றுஞ்சுபெற்றியெவ்வாறெனப்
பன்னினாரவனுற்றபரிசரோ. (களங)

விதியினன்றுவிளைகிலதொன்றென
மதிதெளிந்துமராமரமேயெனக்
கதுவுதோளான்கவின்றிருநாமநீர்
பதியுமன்பிற்பகருமென்றானரோ. (களச)

எருவையேந்தலியம்பிடயாவரும்
இரவிதன்குலத்தோன்றலிரும்பெயர்
பரிவினோதப்பறையுமவண்சிற
குரிமையான்வளர்ந்தோங்கியதென்பவே. (களரு)

பின்னவன்சனகிப்பெருங்கற்புடை
யன்னைவேலையிலங்கையகன்பொழில்
துன்னிநின்றனணீவிர்தொடுகடல்
தன்னைத்தாவியடைவதுசால்பென்றான். (களசு)

நீலன்சாம்பனொடங்கதனீள்கடல்
வேலைசூழிலங்காபுரமேவிடச்
சாலவாற்றலிலமெனச்சாற்றினார்
காலின்மைந்தன்கடுகியுற்றானரோ. (களள)

உற்றிலங்கையொருங்குதுருவியே
கற்றைவார்குழற்சீதையைக்காண்கிலான்
மற்றுநாடியசோகவனந்தனை
நற்றவத்தினினன்குகண்டானரோ. (களஅ)

கண்டுகாகுத்தன்சற்பினலத்தினைப்
புண்டரீகமலர்ப்பதம்போற்றிநின்
றண்டர்வாணனளித்தருளாழியைக்
செண்டுநல்கிக்குறையகன்றானரோ. (களகூ)

சனகியும்பரிவோடவன் றன்கரந்
தின்கரன்போற்செறியுஞ்சூடாமணி
தனையுந்தந்தடையாளமுஞ்சாற்றினுள்
துணைவிற்பெற்றவன்சூழலழித்தனன். (சஅo)

தெவ்விராதசெசமுகனோர்ந்தவண்
இவ்விராவினடுபடையேவினன்
அவ்விராகவன் றூதனழித்தனன்
செவ்வியானக்கனும்பொரச்சென்றனன். (கஅக)

அனையனைக்கொன் றரியெனநின்றவவ்
வனசரன் றனைக்கைக்கொடுவந்துனைக்
கனிவினெய் துவலென் றுகடற்படை
தனைமிகக்கொடிராவணிசார்ந்தனன். (கஅஉ)

சார்ந்தவன் றனிமாருதிதன்னொடு
நேர்ந்துபோர்கமலாசனனீள்கணை
யோர்ந்தெடுத்துவிடுத்தனனெல்லையிற்
பேர்ந்தனன்பிணித்தாங்கவன்றன்னையே. (கஅங)

திசையினீந்துஞ்செழுமலர்தூய்த்தொழ
இசைநிறீஇயவிராவணன் றன்னைபவ்
வசையிலையன்விடவருந்தூதனுங்
கசிவினாற்சிலகட்டுரைகூறினன். (கஅச)

வந்தபான்மைவகுத்துரைசெய்தனன்
நிந்தையாளனிவற்கொலைநேர்கென்றுன்
அந்தவெம்மொழியைத்தடுத்தானறந்
தந்ததென்னத்தயங்கியவீடணன். (சஅரு)

வாலினிற்கனல்வைத்தனன்மாருதி
வேலைசூழிலங்கைவியன்றெருச்
சாலசையக்கனலெழத்தான்வகுத்
தோலிடத்தான்மகேந்திரமுற்றனன். (கஅசு)

ஒல்லையாங்கவர்க்கொண்டொடிச்சீதையாந்
தல்லியைக்கண்டதன்மையுணர்த்தினன்
கல்லைநேர்புயத்தங்கதனுதியோர்
எல்லையில்புகழாளனையெய்தினர். (கஅஎ)

முந்தியெய்தினன்மூதறிவாளனும்
எந்தைகண்டனனேழையையென் றுந்தன்
சிந்தைநின்வயிற்செய்தசமத்தியை
நந்திடாக்கற்பின்ஞானக்கொழுந்தினை. (சஅஅ)

என்றுகூறியிலங்காபுரந்தனிற்
சென்றுகண்டதிறந்தனைக்கூறிய
தன்றியன்னையளித்தசூடாமணி
நன்றுநல்கிநலக்கவணங்கினான். (௧௮௯)

அனகனுமிளையானொடனீகமுந்
தனையடையத்தடவரைதான்விடுத்
தனையின்வெஞ்சிறைதன்னையகற்றிடக்
கனைகடற்கரைகண்டனனென்பவே. (௧௯0)

தென்னிலங்கையர்கோமகன்சேணகர்
தன்னைமாருதிதான்சுட்டவித்தபின்
மன்னும்வானிடமாகவதிந்தனன்
மின்னுபுட்பகமேறிவிளங்கியே. (௧௯௧)

அரக்கர்யாவருமாங்கவனோடுறைந்
திருக்கமாமலரானையினிதழைத்
தருக்கனுஞ்சுடர்மாழ்கவமைக்கெனப்
பரக்கமற்றதைப்பாங்கினியற்றினான். (௧௯௨)

மீட்டுமற்றவ்வியனகரெய்தியே
தீட்டும்வான்புகழ்சேருமமைச்சரைக்
கூட்டிமந்திரங்கோமகன்றானினி
கேட்டுநிற்பக்கிளத்துவதாயினார். (௧௯௩)

மகோதரன்முதன்மந்திரத்தோரெலாம்
பகாதபண்பிற்பகர்ந்தனர்சார்பினாற்
சுகோததியிற்சுலவியவீடணன்
விகாரமற்றமனத்தின்விளம்பினான். (௧௯௪)

ஐயகேட்டியிரணியனாதியாம்
வெய்யவீரரிருந்தனர்மிக்கவர்
வையமேற்செருக்கான்மடிந்தார்பிறன்
தையலைக்கவர்ந்தாரலர்சாற்றவே. (௧௯௫)

என்றவற்கிங்கினையனநீதிகள்
நன்றுகூறிநிறுத்தினனக்கவன்
இன்றெனைத்தவிர்ந்தேகுதியென்னலும்
அன்றுமந்திரரோடகன்றானரோ. (௧௯௬)

அகன்றிராகவன்றன்னையடைக்கலம்
புகன்றடைந்தனன்புண்ணியன்றானுமங்
குகந்திலங்கைவளங்கேட்டுவன்றனை
மகிழ்ந்துமாமுடிசூட்டினனென்பவே. (௧௯௭)

தக்சணையிலாதுநனிவிரைந்துமொருவன்காலந்தணந்துஞ்செய்தால்
இக்கடனீர்வைப்பதனிற்கொடியவெனக்கரைகிற்பாரீண்டுக்காரை
நற்கடத்தினிலைக்கறியென்றின்னனவாஞ்சாத்துவிதநலந்தானெய்து
மிக்கபொருளானுலோவங்கருதாதுனாற்றின்வியன்பயனைநல்கும். (உரு)

பிதிரர்தினந்தருப்பையினொடெண்ணின்னதம்மகத்திற்பிதிரர்கண்டாற்
சதிர்பெறுமற்றவருள்ளங்களிசிறப்பர்துரோணமத்தனையெண்ணில்லலங்
கதுவிடத்தானிறைத்திட்டுத்தருப்பைதனைமேற்பரப்பிக்கனிவினாற்றல்
விதியென்னமறைபகர்ந்ததென்றறிதிகலையாய்ந்தமேதக்கோயே. (உசு)

சுசியொடுபத்திமையின்றிப்புரியினஃதசுரருக்காந்துணைவிற்சென்று
கசிவினொடுமிழிந்தான்பாற்றனமேலாதுபிறர்கையேற்காது
பசியவேயனதோளார்ப்புணராதுகலதியர்தம்பரிசமெய்தா
திசைவினிற்சூதாடாதுபிறரன்னமயிலாதிங்கிருப்பதல்லால். (உஎ)

இழிசனரோடுரையாடாதெண்ணெயிட்டுக்கொள்ளாதிங்கிருகண்டுஞ்சல்
பழியகலும்பகற்போதுகொள்ளாதுகட்டிலிற்கண்படைகொளாது
விழைவின்வேண்டியநுகராதூணிரவில்விழையாதுவிழைந்திரண்டு
பொழுதருந்தாதுரையாடாதொருபாழ்த்தமனைவாவிப்புனலாடாது. (உஅ)

நறுங்கலவைபுனையாதுபூப்பானமாதரொடுநயந்துபேசா
தறங்குலவுமனத்தோயிங்குரைக்குநராத்திகப்பயனையடைவர்கண்டாய்
சறங்குபுகழ்கிருதத்தினிரண்டயனந்திரோதைவயிற்கருதினொன்று
பிறங்குதுவாபரமும்மைமதிமதியொன்றிக்கலியிற்பெருநீர்வைப்பில். (உகூ)

விரதமனுட்டித்திடவேவேண்டுமெனவாகமங்கள்விளம்பாநிற்கும்
பொருவருநற்றேகதிடமுள்ளவனாயதுநெருங்கப்பொருந்தின்மேற்கொண்
டுரைகெழுமாத்திகமுன்னாளந்தணருக்கறுசுவையூணுதவவேண்டும்
பெருமவாத்திகநாளின்வைகறையினதிப்புனலிற்பெட்பினாடி. (௩0)

கடன்கழித்திட்டுவுபாசனஞ்செய்தவ்வனலில்லாள்கரத்தினல்கி
விடல்கருமமனையில்லான்கருக்கொண்டவில்லுடையான்வேறுவேதத்
திடனுடையசாகையான்மறையோதானவுபாசனஞ்செய்யாதான்
கடல்வரைப்பிற்பிறர்பழிக்கத்தக்கான்றன்னிலைகடந்தபிரமசாரி. (௩க)

என்றின்னோரொழித்தொழிந்தவுத்தமவந்தணர்தம்மையிசைந்துகூவி
நன்றெமதில்வயினாத்திகக்குறுதிரெனவடைகாய்நயந்தளித்துத்
துன்றுதயிலம்பிண்ணாக்குடனுதவிநீராட்டித்தொடங்கவேண்டும்
இன்றந்தமுறைகருதான்பிதிர்க்களவன்றனைச்சினப்பரென்றுமாதோ. (௩உ)

கருத்தாவும்வெள்ளியெனவிழியிழப்பன்வயங்குமறைக்கலைவலோராம்
வரித்தாருமபிசிரவணப்பெயரின்மனுவதனைமகிழ்விற்கேட்டுப்
பெருத்தாதரத்தொடன்னம்புசியாரேலஃதசுரப்பெயர்த்தாங்கண்டாய்
மருத்தாரேரென்றின்னவப்பெரியோனெடுத்துரைத்தான்மரபினம்மா. ()

நீராடினுயல்லுயதற்குரியபண் டங்கணேடினுயன்
ருராய்ந்துமறையோரைவரித்தனையுமன் றுபகலாயிற்றம்மா
தேராய்கொலாத்திகமூந்தவ றுறுகின்றதுசெய்தேதீரவேண்டும்
ஊராஞேர்கையேற்பானுடங்கியைந்துசெய்வனெனினுனக்கிங்கென்னே. ()

மறைமொழிந்தநீர்மையினுலிவ்வாறுசெய்யவழியற்ருனுயிற்
கறைதபுநல்விரதமனுட்டித்தவன்கான்போந்தழலேகணித்ததென்றிம்
முறையியம்பியுத்தமாதமமத்திமஞ்செய்யான்முந்நீர்வைப்பின்
அறையுமிரவுரமுன்ஞநிரயமெய்தித்துயரமடைவனன்றே. (௫௫)

அன்னணமோர்மனுவந்தரந்துயரமாண்டெய்தியதுதீர்வின்றி
மன்னுலகிஞேரியாய்த்தோன்றிப்பல்பிணமாந்திமறித்துமன்ஞன்
தன்னமாமட்டையாப்பிறப்பெடுத்துமிலேச்சனெனத்தான்பிறந்து [ருள்.
கொன்னவில்வேற்கிராதனெனத்தோன்றியழிவானிஃதுகுறித்தமற்றென்

வேறு.

இன்னவாறவற்கியம்பியவின்னுரைகேட்டும்
அன்னமாமதியிலியந்தத்திருவினைநோக்கி
என்னடியெனக்கோதினையெனச்சினந்தனையான்
றன்னமேனுமோராதிதுசாற்றுவான்ருெடங்கும். (௫௭)

எந்தைபாத்திகக்கின்னுமைம்மதியுளவெனக்கு
முந்தையாரணமுணர்ந்தவர்போன்மொழிகின்ருய்
சிந்தைநாணிலாய்தேசிகன்பதிபிதாவினையோர்க்
கந்தராசியமுறைக்குநர்நீணரகடைவார். (௫௮)

என்றநன்மொழியுணர்கிலாதெமக்கிவணுரைத்தாய்
நன்றுநன்றெனக்கண்சிவந்தடித்துநானறியா
தொன்றுமின்றெனநீரின்மூழ்காதுறுகடன்மை
அன்றுதான்புரியாதருந்தினன்பழஞ்சோறு. (௫௯)

உண்டபின்னடைகாய்கையிற்கொண்டுசென்றுற்ருன்
கண்டுபோன்மொழிப்பரத்தையர்சேரியைக்கனிவான்
மண்டுபேரன்பிற்சுத்தையுமவன்வரம்பில்லாப்
பண்டைநீர்மையையறிந்துதான்பரிபவமடைந்தாள். (௬०)

பரத்தைசேரியையெய்தியபாதகப்பனவன்
தரத்தினீடியசுத்தைசாரகந்தனையுள்ளக்
கருத்திலன்பிலான்சில்பகல்கழிந்தடைந்தனனுல்
அருத்தியோடவளவன்முகநோக்கியாங்கறையும். (௬௧)

மதியொரைந்துளவாத்திகக்கெனவ்மூத்தினையால்
அதுவரும்பொழுதென்றதற்காவனபொருள்கள்

மதிவலாயொல்லும்வகையுதவுவனெனவோதக்
கதுமெனக்கொடும்பாதகன்கட்டுரைத்திடுமால். (௪௨)

ஒன்றைநாடிவேற்றூர்வயினுற்றனனொருநாள்
நன்றவாத்திசமெய்திடநயந்துனாற்றினன்மற்
றின்றொராறுநாளாயினவேந்திழாயிவணீ
என்றுமாத்திகமாத்திகமெனுமொழியிசைத்தே. (௪௩)

என்னதாயுளைக்கெடுத்தனைபோலுமெற்கிறுதி
தன்னைநாடினையெனவவடலைவயிற்புடைப்ப
அன்னமாதுயிர்துறந்தனளம்பிகைபாத
முன்னிமேயினண்முற்புரிபுண்ணியப்பயனால். (௪௪)

அன்னபாதகனவட்குரிமைக்கடனாற்றித்
தன்னையக்கொடும்பாதகம்பற்றியீர்த்தலைப்பப்
பின்னுந்தன்மனையவள்வயிற்கிடப்பனபிறவும்
மன்னுமந்தணர்தமக்குவிற்றவன்மதிகெட்டே. (௪௫)

ஊர்கள்பல்லபோந்துன்மத்தனாகியோரிடத்திற்
சார்கிலாதவன்முற்புரிபுண்ணியச்சார்பாற்
சேருநல்வினையிருந்திடிற்சேர்வனசோரா
பார்பழிச்சுறுமுல்லைமாநகர்படர்ந்தனனால். (௪௬)

காசுலாமுலைக்கொடியிடைகாதலனெங்கள்
மாசிலாமணிக்கன்பர்தாமரபினினுனாற்றும்
பூசனைத்திறம்விறப்பொடுபொருக்கெனக்கண்டான்
பேசுமைம்பெருப்பாதகக்குழிசியாம்பெரியோன். (௪௭)

அற்றைநாளெலாமாங்கவன்றிரிதந்தேயருக்கன்
ஒற்றையாழியந்தேர்குடபாலுருக்கரப்ப
மற்றவ்வேதனுமாசிலாமணிப்பிரான்கோயில்
உற்றனன்முன்னைவினையுவன்பிடர்பிடித்துந்த. (௪௮)

வேதநீற்றினைப்புனையுமெய்யன்பர்கள்குழூஉக்கொண்
டாதரத்தினோடடைந்தவவ்வாலயக்கோர்சார்
மாதரஞ்சொலார்மயிலனையார்தமையணுகி
ஆதனல்லிசைபாடியேமுழவயர்த்தனனால். (௪௯)

அன்னமாதருளொருத்தியக்கானத்தின்மயங்கி
இன்னபாதகன்வலைவயினகப்படவினையான்
உன்னிவந்தமைமற்றதுவாகலினுவந்தக்
கன்னிதன்படிவத்தின்மேற்காதல்கொண்டயர்ந்தான். (௫௦)

அன்றிராமுழுதுந்துயிலாதந்தக்கொடியோன்
என்றுதான்குணதிசைவயினெய்திடவெள்ளிக்
குன்றமேவியகுணநிதிதனையடைந்தெவருஞ்
சென்றுதாழ்ந்திடத்தானுமத்திரண்டுச்சார்ந்தான். (௫௧)

ஊணிலாதுயிர்சோர்தலானொருவந்தந்துயிலான்
நாணிலானவணிருத்தலானள்ளிடையாருங்
காணவாவிதான்றுறந்தனன்கான்மிதிப்புண்டங்
கேணியார்விழியாரிடைமனந்தந்தவினையான். (௫௨)

வேறு.

அந்தாரணியினவன்மாண்டவப்பொழுதே
வந்தார்கொடியமறலியவன்வன்றூதர்
தந்தானைகொண்டெதிர்ந்தார்தழலிற்கொடியோனை
முந்தேருத்தும்மெறியுமென்றேமொழிந்தாரால். (௫௩)

என்றுநெருங்கவெனையாள்கணத்தலைவர்
அன்றினார்சோவெறியுமம்மானருண்மேவும்
நன்றுதவுநந்திபிரானல்லருளாற்சென்றணைந்திட்
டன்றவர்தம்மையடைவேயெதிர்த்தாரால். (௫௪)

வந்தெதிர்ந்தப்பாதகனைமானமிசையேற்ற
அந்தநமன்றூதுவருமையவிவன்றன்போலுஞ்
சிந்தைவருந்தச்செயற்கரியவெம்பாவம்
முந்தப்புரிந்தாரிலையாலெனமொழிவார். (௫௫)

பிறந்ததுதொட்டிந்தப்பெரும்பாதகன்புரிந்த
மறந்தனக்குநேராவசுந்தரையிலில்லையுயிர்
துறந்தவிவனைத்தொன்னிரயத்தாழ்த்த
மறந்துகொடுசேறல்மாண்போவெனக்கரைந்தார். (௫௬)

அந்தமொழிகேட்டருஞ்சாரதருரைப்பார்
இந்தநெடும்பதியினெம்மானெழினிசியின்
முந்தவுணவிலான்முகிழாணிருவிழியும்
வந்துயிர்நீத்தானதனான்மாண்டவுலகெய்தினனால். (௫௭)

இன்னபொழுதத்திருங்காரியமியைந்தே
முன்னியுஞற்றிமுகிழாதிருகண்ணும்
பன்னுவரேனுமம்பரமபதிக்கணித்தாய்த்
துன்னுகிற்பாரென்றுசொல்லுஞ்சிவாகமமே. (௫௮)

இப்பதியினெந்தைக்குரியவெழினிசியில்
ஒப்பொருவரில்லாதவுத்தமணாநாடியோன்

மெய்ப்பெருமையென்ஞன்வியந்துரைக்குமாறன்ருல்
அற்புதனைத்தேருமருட்கடலன்னீரென்றே. (௫௯)

மாதரசிபாகத்தெம்மானைத்தாழாதுவிலே
மாதுபொருட்டர்தவான்பதம்பெற்ருனெனினக்
கோதில்கருணைக்குணக்கடலையுள்ளபடி
யோதுகிற்போர்தஞ்சீருரைக்குந்தரமேயோ. (௬௦)

வேறு.

பாவமித்திரனெனப்படும்பரிசினனுமத்
தேவமித்திரன்வீடுபேறெய்தியதிறமீ
தாவலானமரேசனையன்பினுனன்று
மேவுசம்புதாசன்கதியடைந்தமைவிரிப்பாம். (௬௧)

**தேவமித்திரன் கதிபெறுபடல முற்றிற்று.**

---

# சம்புதாசன் கதியடைந்த படலம்.

சிவதருமந்தனைக்குயிற்றத்தேமகன்றுகையேற்கு
நவமலிசிந்தையருமடிவைப்பினுக்குநானிலமேல்
எவமகற்றும்பரிமேதப்பயனெய்துவாரொன்னப்
பவனுரையாஞ்சிவாகமங்கள்பரிவினுரைத்திடுமன்றே. (௧)

அத்தருமந்தனையன்பினுற்றுநர்தம்பெருவளனும்
அத்தருமக்கிரும்பொருளைப்பயன்படுப்பார்தஞ்சீரும்
இத்துணையென்றெம்மனோரெடுத்துரைக்கும்பரிசன்றென்
றத்தனுமாபதிசொன்னவாகமங்கட்டுரைத்திடுமால். (௨)

சொன்னதருமந்தனக்குத்துணையாகவிருநிதியம்
மன்னியதொன்முதன்மகிழுமாண்பினியற்றிடினென்று
மன்னதொன்முதல்வித்தினங்குரிக்குமென்றெடுத்துப்
பன்னுமருமறையெனினிப்படியென்னப்படுவதோ. (௩)

ஆக்கைவருத்தியுமன்னவறங்குயிற்றும்பரிசுடையார்
நீக்கமிலாவானந்தநிருத்தநிலவும்பதத்தார்
தூக்கியசேவடியெய்தித்துயரமொழிந்திடுவரென
மாக்கனிவினெடுத்துரைக்குமாதேவனுகமமே. (௪)

உள்ளவாறித்தருமமுஞற்றிடுமெய்ப்பரிசுடையார்
கள்ளமேயலகைமுன்னுங்கடும்பரிசமுறலாகார்

அள்ளிவிடமுண்டபிரானடிமலர்க்கேசார்பாவார்
வெள்ளரவ்முன்னுயவேதையுறுரெனுமறையே. (ரு)

நாம்புகழுமித்தருமநலிவுறச்செய்வாரென்றுந்
தாம்படிமேற்பலதுயரந்தணவாமேயுற்றிறுதி
யாம்பொழுதிரவுரவமுன்னருநிரயம்புகுவரென
எம்பலினொடெடுத்துரைக்குமிறைவனருளியமறையே. (சு)

இன்னவாறொருசம்புவிணையடிக்காட்புரிநீர்மை
தன்னமிலாதுனுற்றலினித்தரையின்மேலவன்றனையே
முன்னியெவருஞ்சம்புதாசனெனமொழிந்திடுவார்
அன்னவனுமாபதிதாளடைந்தமைசாற்றுதுமாலோ. (எ)

வேறு.

கானம்வரம்பிலாதுடைத்தாய்க்கற்றோர்சாலச்செறிவதுமாய்
மானம்வரம்பிலாப்பரசுமலர்க்கைராமன்வாழ்நாடிங்
கானவரம்பிலாமதமாவணிகளணிகளாக்குழும
வான்வரம்பன்காத்தோம்பும்வளநாடென்றுமலைநாடு. (அ)

அன்னநாட்டின்மலைச்சிகரத்தருவியனைத்துந்திரண்டெழுந்து
பொன்னுமணியுநெடுந்திரைக்கைபொருந்தியென்றுமிழிந்துவரும்
நன்னலஞ்சான்றெனைத்துவினைநாடியகற்றுநதிப்பாங்கர்
மன்னும்பதியினொருநான்குமறையோர்தவத்தாற்றோன்றியோன். (கூ)

வேறு.

அரியமாமறைகூறிடுமந்தமில்பிரம
சரியநன்னிலைமேவினேன்பிஞ்ஞகன்றாள்கள்
கருதிடும்பெருஞ்சிந்தையானவன்கழனுடுந்
திரிபின்மெய்த்தவர்சார்பினாற்செறிந்திடுநலத்தான். (கo)

உத்தமச்சிவபுண்ணியமுதிர்ச்சியானுவனக்
கத்தனோதியசிவாகமங்கடைப்பிடித்தொழுகி
நித்தனின்மலமணியையுநீற்றையும்புனையும்
வித்தகச்சிவவேதியர்தமைவிழைந்தடைந்தே. (கக)

இறைவனாரருள்பெறுநெறியாதெனவினையோர்
கறைவிராவியகண்டனார்கண்டவாகமத்தின்
முறையினாற்செயுந்தீக்கையேமுமலமோசனஞ்செய்
தறவனாரடிப்பத்திமையளிக்குமென்றறைந்தார். (கஉ)

அன்னமாமொழிகேட்டவனவ்ரடியிறைஞ்சிப்
பொன்னவாஞ்சடைப்புண்ணியன்புண்டரீகத்தாள்

மன்னுமன்பொடுவழிபடுநெறியுரைக்கெனலும்
முன்னியாங்கவரன்பினான்மொழிதன்மேயினரால். (கங)

ஆகமத்தினிற்றீக்கையையடைந்தரன்கழற்கண்
பாகநின்றவன்றிருவெழுத்தஞ்சுமுச்சரிப்பார்
ஏகநாயகனேலவார்குழலியாமிறைவி
பாகநாயகன்பதநிழலெய்துவர்பாங்கால். (கச)

பின்னுங்கூறுதுமெனைத்துளபீடுசான்மறையுங்
கன்னிபாகனேயிறையெனக்கட்டுரைத்திடுமால்
அன்னதன்றிமற்றயலவர்தம்மையுமறைதல்
இந்நிலத்துபசாரமென்றிசைப்பராலின்னும். (கரு)

மறையினந்தநால்வருக்கிறைவகுப்பதுசொல்லா
னறைவதன்றுகைக்காட்டுமற்றன்னதன்பயனே
இறைவனோடொன்றலிருவிரன்முடக்கியசெய்கை
முறையின்மும்மலமோசனமூவிரல்விலக்கே. (கசு)

தமருகக்கரஞ்சிருட்டிமற்றபயந்தான்றிதியென்
றமையுமோதுசங்காரமிங்காமழுக்கரமே
சமைதிரோபவமூன்றியதாளனுக்கிரகம்
அமலன்குஞ்சிதபதமவனவயவத்தொழிலே. (கஎ)

மாயனாருந்திமலரவன்வருதலுமலரோன்
ஏயதோமுகந்தனிலவன்வருதலுமினையோர்
ஆயமாமறைகூறியவரும்பரமன்றால்
நீயுணர்ந்திடுமற்றதற்குரைப்பதெந்நியதி. (கஅ)

வேறு.

போதாசனன்கரியோன்புரந்தரனாதியர்தமக்கு
மாதோர்பாகன்றானேபரம்பரனுமறையனைத்து
மோதாநிற்பதுகருதினுவனையெனைத்துளவுயிரு
மாதேவாவென்றுரைக்குமனுவொன்றேசான்றாமால். (ககூ)

தரணியிலாருயிர்வருக்கந்தனைப்படைத்தன்மிகக்காத்தல்
பரிவினொடித்திடன்மறைத்தலருளலெனப்படுமைந்து
கருமமுனாற்றிடுமவர்க்குக்களைகணாயவனாயந்தம்
புரிதரலானரனென்னப்புராந்தகனைமறைபேசும். (உ0)

மும்மறையினடுவொன்றுமூவிரண்டொடொன்றாகுஞ்
செம்மைமலிகாண்டத்துத்திகழ்நடுக்காண்டத்தேழு
மெய்ம்மைதிகழ்சங்கிதையின்மேவுநடுவினிலொன்று
மெய்ம்மையுமந்தாதியொழிந்திலகுமவன்றிருநாமம். (உக)

உலகமெலாம்விரியுமுதற்காலத்தினெவனுள்ளான்
பலவகையபுவனநாயகரையெவன்படைத்துடையான்
நிலவுலகமீளவும்வந்தொடுங்குங்காலெவனுள்ளான்
தலைவனவனென்மறைகடணப்பிலாதெடுத்தோதும். (உஉ)

உறங்குவதுபோலுமொருசாக்காடிங்குலகினர்தா
முறங்கிவிழிப்பதுபோலும்பிறப்பென்னுமுறைக்கிலக்காய்
நறுந்துளவத்தெரியல்புனைநாரணனும்பிறப்புளனே
லறந்தனையேகரையுமறையவனையுமேயிறையெனுமோ. (உங)

வேறு.

ஈசனுரைத்தவாகமங்களெடுத்தேகூறும்பொருண்மூன்றும்
பேசிற்பதியேபசுவோடுபாசமென்பர்பெருமறைசொல்
தேசுமலியும்பதியையான்மாச்செறியுமுத்தித்திறம்பலவால்
நீசற்பறிதியென்றருளானிகழ்த்தப்புக்கார்நெறிமுறையான். (உச)

கந்தங்கெடுகைகுணங்கெடுகைகன்மங்கெடுகைமலங்கெடுகை
நந்துந்தனுமுத்தியினழியாதிருக்கைமாதர்நலமென்றுந்
தந்தங்கரணம்பதிக்கரணமாகையுயிர்தானழிகையஃ
தந்தமிலதாஞானமுறலரும்பாடாணம்போன்றிருத்தல். (உரு)

என்னவுரைக்குமிவையனைத்துமியம்பிற்பழிசேர்முத்தியெனச்
சொன்னவிறைநூலினியணுக்கடேசேர்மும்மைலநீங்கி
அன்னவருளோடணைந்திறைவனடிநீழலிற்சென்றணைந்துநிற்கும்
நன்னர்முத்தியேமுத்திநலனூர்முத்தித்திறனிதுவால். (உசு)

தூரவனைக்காற்பரிசத்தாற்கூறும்வாக்காற்பாவனையால்
விரவுநூலானியோகத்தான்வீறுசெறியவுத்திரியதனாற்
கரவுமலிமும்மலநீக்குங்கருதாருயிக்கடைவினி
பொருவிலிரண்டுதிறப்படுமால்புகழ்சாலவுத்திரியென்பதுவே. (உஎ)

ஞானவதியேநற்கிரியாவதியோடென்னநம்பனுரை
யானவரியவாகமங்களருளிச்செயுமாலரன்கழற்கே
மேனவன்பிங்குடையாய்நீமேலாந்தீக்கைதனையெய்தித்
தானமதமாவுரியான்றன்சார்பேயடைகவென்றனரால். (உஅ)

அந்தத்தீக்கைமுத்திறமாவாகமங்கட்டுரைக்குமவை
சந்தச்சமயம்விசேடமொடுசதிர்கொணிருவாணமதென்ன
முந்தப்புகலுமவையனைத்துமுறையேயெய்தினூலலது
சிந்தப்புரமூன்றெரித்தானைச்சேரலரிதாமென்பாரால். (உகூ)

நாதமார்க்கத்தனக்கென்றுஞ்சமயந்தகுமாலெஞ்ஞான்று
மேதமேயில்சகமார்க்கம்புத்திரமார்க்கமென்பவைகட்

கோதும்விசேடமென் றுரைப்பருலப்பில்சன்மார்க்கந்தனக்குப்
போதகிருவாணமதென்னப்புராரிமறையும்புகன்றிடுமால். (௬௦)

வேறு.

பரமதப்பொருள்பாங்கினினுணர்ந்தபின்சுபக்க
மரபினோர்க்துவைதிகசைவமாண்பினிற்றேர்ந்து
பரமனாரடிப்பதுமமேநாடியபனவோன்
பரிசினைத்தெனப்பகரவும்படுவதோபார்மேல். (௬௧)

என்றுணர்ந்தவனெம்பிராணியம்புமாகமத்தி
னென்றுமெய்மைசாறீக்கையையுற்றிறைசரித
நன்றுகேட்டுளங்கசிந்துநம்பானமர்தலக்கே
சென்றுதான்புதுக்குஞ்செயன்மேற்கொடுதிரிந்தான் (௬௨)

சினகரந்திருமதின்முதலாயினசேவூர்
அனகனுக்கதியாதரத்தொடும்புரிகிற்போர்
பனகபூடணனுருப்பெறுவாரெனிற்பாரிற்
கனிவினூற்புதுக்குநர்பலன்கழறவும்படுமோ. (௬௩)

மனைகடோறும்புக்கிருகையேற்றவர்தருமாமை
தினையனைத்துந்தன்னுடல்விருத்தியிற்செலுத்தாது
மனமுவந்தவர்தரும்பொருண்மணிமிடற்றிறையாம்
அனகனாலயக்கேகொடுத்துதவியாங்குழல்வான். (௬௪)

தன்முயற்சியான்வரும்பொருளனைத்தையுந்தாழா
தன்பினாலயத்தொழில்செய்வார்க்களித்தமரேசன்
மன்னுமாலயமதில்சுவர்கோபுரம்பிறவும்
அன்னவேதியன்புதுக்குவான்றிரிந்தனனம்மா. (௬௫)

இப்பணிக்கணேநின்றிடுமெழிற்சம்புதாச
விப்பிரப்பிரான்விழைந்தொருதினந்தனின்மேவார்
முப்புரந்தழற்படுத்தவன்மூதெயிற்காஞ்சி
வைப்பையெய்தியாண்டங்ஙனம்புரிந்தனன்மகிழ்வான். (௬௬)

கம்பமேவியகண்ணுதற்பணிகனிந்துஞற்ற
நம்பனாரடிக்கன்பராநயத்தகுசில்லோர்
உம்பரோதுசீர்முல்லையின்சிறப்பெடுத்தோத
அன்புதன்பிடர்பிடித்துந்தவாங்கணைந்தனனால். (௬௭)

அணைந்தவந்தணன்மங்கலவாவிநீராடி
அணிந்துநற்சிவசாதனமங்கணன்கோயில்
பணிந்துமும்முறைவலம்வந்துபரிவொடும்போந்து
குணங்கடந்தவக்கோமணியுடன்கொடியிடையை (௬௮)

வலம்வந்தெம்மையாளுடையவள்ளலையுமைதனைமெய்
கலந்தவன்பின்னருச்சனைமுதலியகடன்கள்
மலந்தெறத்திருத்தொண்டுசெய்மாண்புடைமறையோன்
புலங்கசிந்தவனுற்றியேதோத்திரம்புரிவான். (௩௯)

வேறு.

கூத்தனைஞானக்கனியைக்கறைமிடற்றுச்
சுத்தனைமுக்கட்சுடர்க்கொழுந்தைத்தொன்மறைசொ
லத்தனையெங்களழகனையனுதிமல
முத்தன்சீர்மொழியாதமொழியென்னமொழியே
முதல்வன்சீர்மொழியாதமொழியென்னமொழியே. (௪0)

வம்பமருங்கூந்தன்மடவாளொருபாகத்
தம்பவளமேனியழகனைத்தென்காஞ்சிநகர்க்
கம்பனைமுக்கட்கருமணியைமுல்லைவன
நம்பனையேவாழ்த்தாதநாவென்னநாவே
நயந்தவன்சீர்வாழ்த்தாதநாவென்னநாவே. (௪௧)

கம்பமதமாகளிற்றுரிவைப்போர்வையனை
உம்பர்பிரானையுமையாளொருபாகத்
தெம்பெருமானையெழிலார்வனமுல்லைச்
செம்பயனைக்கேளாதசெவியென்னசெவியே
சிற்பரன்சீர்கேளாதசெவியென்னசெவியே. (௪௨)

படநாகணிவானைப்பாண்டரங்கத்தானைத்
திடநான்மறைசொல்சிவனையணியாரூர்
உடையானையென்னையுடையானைமுல்லைவனக்
கடவுளைச்சென்றெய்தாதகாலென்னகாலே
கருதியவன்கோயில்புகாக்காலென்னகாலே. (௪௩)

வேறு.

அரிதினேத்தியாங்கின்னணமறையவரகத்திற்
பரிவினோடுகையேற்றுண்டுபரம்பரன்றளியை
அருமையாகவேபுதுக்கவுமார்வமீக்கொண்டு
திரிதந்தான்பலதேத்தவன்செம்பொனைநாடி. (௪௪)

ஆலயத்திருக்கோபுரமதின்முதலாய
சாலவேபுதுக்குந்தொழிறன்னைமேற்கொண்டு

மூலகாரணன் முழுமுதன் முக்கணெம்பெருமான்
காலகாலன்ருடொழுதவணமர்ந்தனன்கனிவான். (சரு)

இன்னவாறவணெழுகுநாளிவற்கெதிர்மறையா
மன்னுமாறொருமறையவன்மாதர்தங்காதல்
துன்னியாங்கிறைதுணைக்கழலடைந்தனனென்ன
அன்னவன்கதையுரைக்கெனச்சூதனுங்கறையும். (சசு)

**சம்புதாசன் கதியடைந்தபடல முற்றிற்று.**

---

# சித்திரகன்மன் கதியடைந்த படலம்.

அம்மைபாடியவணைந்திடவனையாட்கலப்பில்சீர்க்கழலளிப்தாய்ப்பின்னோர்
தம்மதாருயிரோர்வணிகனுக்காத்தந்ததாயன்றுதாண்டவங்காளி
நம்மையாளுடையிறைவனார்நடிக்கநயந்துகண்டதாய்நலக்கவின்றோங்குஞ்
செம்மைசேர்புகழ்மருவியநின்றுதிகழுநாடெனுந்தொண்டைநன்னாட்டில். (க)

அம்மையப்பனையமரர்பிரானையணங்கொர்பாகனையருந்தவத்திராமன்
மும்மைஞாலமுந்தொழத்திருவிழவுமுன்னராற்றுமூதூரெனயாண்டும்
எம்மையாளுடையிறைவனைமயிலாயிறைவிபூசனையியற்றுமூரென்று
செம்மையானுலகெங்கணும்புகழச்சிறந்துமிக்கதுமயிலைமாநகரம். (உ)

அன்னமாநகரந்தனிலொருநாலாரணம்பயிலந்தணர்மரபில்
வந்தவன்பெயர்சித்திரகன்மனென்றெஞ்ஞான்றினிதுரைக்குமாஞாலம்
பொன்னெனத்தகுமம்மரபுதித்தும்புனிதமில்லவர்போலவன்புவிமேல்
வன்னெடுந்தொழில்புரிபவனுகிவஞ்சநெஞ்சனுயவண்சரித்திருந்தான். (ஙு)

இனையன்வேத்தியல்பொதுவியலென்னுமிருதிறத்துநாட்டியநன்னூல்பயின்று
கனியுமாமொழிக்காரிகையார்பாற்காதலானவர்பழகிடவிசைநூல்
இனிதுதான்பயில்வித்திடுவோனென்றியாருமேசொலவிருந்தனனிவனே
அனகனெம்பிரானடிமலர்பரசாதவலனுய்த்திரிதரும்பரிசுடையான். (ச)

வேணிமேலொருவேணிவைத்தோங்கும்விமலனார்புகழ்மேவிடாதென்றும்
நாணிலாதுதன்பால்வருவாரைநலியுமாசெயுநாரியரில்லங்
காணியேயெனமருவியங்கவற்குக்காற்றொண்டேசெயுங்கருத்தினனோர்நாள்
மாணிபால்வருங்கூற்றினைக்குமைக்கும்வள்ளலாரருண்முன்வழிகாட்ட, (ரு)

முன்னையூழிவன்றனைப்பிடித்துந்தமுல்லைவாயிலைமுன்னணைந்திறைவன்
அன்னையாங்கொடியிடையினொடென்றுமமருமாத்தலம்யாண்டுளதென்றே

இன்னலைபுரிதருங்கொடியோனும்யாரையுந்தனிவினவகிலாது
வன்னெடும்பயோதரம்விலைபகருமாதரார்மறுகிணைமருவினனால். (சு)

மறுகிலெய்தியாங்கொருமடமானைவலிதிற்கண்டவள்வசந்தனிலொழுகி
முறுகுகாதலாற்கைத்தெலாமவட்கேமுன்னிநல்கியோன்மொழிதருகின்றான்
இறுகிடைக்குடமுலைச்சியர்சமயமெண்ணலேசமயம்மவரில்லங்
குறுகலேவிசேடம்மவர்தம்மைக்கூடலேநிருவாணமென்பதுவே. (எ)

அவருந்தானுமொன்றுவதேயாகுமவலந்தன்னைநீத்திடுமபிடேகஞ்
சிவனுரைத்திடுமாகமமுறைக்குஞ்செய்தியன்றெனத்தெருமராநின்று
பவர்வணச்சடையரன்பதக்கன்புபயக்குநெஞ்சுடைப்பாவைதனிலத்தே
கவர்மனச்சிறியானுமுண்டுறங்கிக்காலமங்கலகில்லனகழித்தான். (அ)

அன்னமாமடமாதுவெம்பழிபாவத்தினுக்கஞ்சியாங்குநிற்பவளெங்
கன்னிபாகனுக்கடிமையாயிருந்துங்கருணையேயின்றிக்கைத்தின்மேல்விழைவு
மன்னிவீண்ரையணைந்துநாள்கழிக்கின்வஞ்சினக்கொடுங்கூற்றுவந்தணைந்தால்
என்னையாண்புரிகேனவன்றன்னுலிடருறுதிவண்வாழ்வனேவறியேன். (கூ)

என்றுநாடியசிந்தையாளச்சமெய்திநாடொறுமெம்பிரான்றலக்கே [மன்
சென்றுதொண்டின்மேனின்றனளவள்காற்றெண்டின்கீழ்நின்றசித்திரகன்
துன்றுசூசியுமிழையுமேயென்னத்தொடர்ந்துகாதலிற்றன்றெடக்குண்டான்
அன்றொர்ஞான்றவடன்னெடுமமலனமருமாத்தலமண்மிவந்தடைந்தான். ()

வந்துகோயிலுட்புகுந்தவளோடுமைத்தமாமணிகண்டனைமகிழ்வாற்
சிந்தைசெய்குநருள்ளமேமருவுந்தெய்வநாதனைச்சிறுகிடைநுதற்கீற்
றந்தில்வானுதலம்பிகைதன்னையடைவிற்கண்டவன்றன்னையுமறந்த [த்தால்.
சிந்தைமேவியேயிருகரங்குவித்துச்சென்னிமேல்வைத்தான்செய்தபுண்ணிய

அங்கவன்றிருப்பணியினைத்தொடங்குமன்பனுஞ்சம்புதாசன்சேர்த்துள்ள
வெங்கொடுங்கற்கள்சந்நிதிமருங்கேமிகவிறைப்புண்டுகிடந்தமைநோக்கித்
தங்குகாதலினவளிருகாலைத்தகவருத்துமென்றதற்குளநைந்து
செங்கையாலெடுத்தங்கொருமருங்குசெறித்தனன்சிவநெறியறியாதான். ()

இன்னவாறந்தப்பதிதனத்தலத்தினென்றும்வாழ்க்கையேமேவியபடியாற்
கன்னிபாகனைக்கண்டதோர்பரிசாற்கைகளஞ்சலிகூப்பியமுறையால்
வன்னெடுங்கற்கள்சேர்த்திடுமாற்றால்வஞ்சநெஞ்சனேயாயினுமவனே
என்னையாளுடையிறையவன்வதியுமிருஞ்சிலம்பினையெய்தினனம்மா. (கரு)

வேதநாயகன்றிருப்பணிக்குரியவெய்யகற்களைச்சிரத்தையொன்றின்றிப்
பேதவாங்கிருத்தியபுலைமறையோன்புனிதன்மேவியபொங்குசீர்க்கயிலை
நீதியானடைந்தனனெனினிமலனிலவுமாலயம்புதுக்கியநின்ற
கோதில்வேதியன்சம்புதாசன்முன்குறித்துறும்பதங்கூறுதலரிதே. (கச)

வேறு.

உடம்பாட்டினெதிர்மறையினுமாபதிக்கேபணிபுரியுங்
கடம்பாட்டைமேற்கொண்டார்கதியடைந்தபரிசுரைத்தாம்
இடும்பாட்டினுட்கிடவாதெம்பிரான்றனைக்கண்டு
மடம்பாற்றுந்தொண்டைமான்வழிபாட்டையுரைப்பாமால். (கடு)

**சித்திரகன்மன்கதியடைந்தபடலம்முற்றிற்று.**

---

# தொண்டைமான்வழிபடுபடலம்.

சீர்நாடுசெங்கமலத்திருநாடுதிருவாரூர்
ஏர்நாடுநகர்மேவவெற்கைபிரான்றுறக்கமகன்
ஞர்நாடுமலர்த்தாரானருந்தவநாடியவணைந்த
நீர்நாடுபெருநாடுநிகழ்த்திடுநன்னீர்நாடு. (க)

இருமுனிவர்நடங்காணுமிரும்பதியுமிறையொருத்தி
கருவுயிர்ப்பத்துணைசெய்தகவின்றலனுமருஞ்செல்வ
மருவுமொருபெருந்தோணிவார்கடன்மேன்மிதந்ததெனுந்
திருநகரும்படைத்ததொருசெம்பியன்றன்றிருநாடு. (உ)

வாகையாற்செம்பியன்றன்வன்மையாற்கோலோச்சும்
ஓகையாற்சிறந்தபதியுயிர்க்கெலாம்பெரும்பந்தம்
போகையானீலவிழிப்புணர்க்கையானெவ்வெவரும்
நாகையாதெடுத்துரைக்குநலத்ததொருகடனாகை. (ங)

புலிப்பறழும்புல்வாயும்பொருந்தியொருதடத்தென்றுஞ்
சலிப்பின்றிநீரருந்தத்தடவுக்கையாளியொடு
புலக்களிறுநட்பாகப்புணர்தரநல்வளவர்பிரான்
கலிப்பகைநீத்தரசாண்டகவினகரங்கடனாகை. (ச)

இந்நகரந்தனைப்புரப்பானிரணியமன்றினைவேயு
மன்னன்வழிவருசீரான்மறங்கடிந்திட்டறனோம்பும்
பொன்னனையகுணமுடையான்பொறையினிலமகளனையான்
மின்னவிரும்வேணியற்கேவியனன்புபுரிநீரான். (ரு)

ஒருஞான்றம்மன்னர்பிரானோங்குபத்ரகினிசூழ
வருவான்வேட்டையின்மனமாய்வலைமுதலபொருள்கொண்டும்
வெருவாதுமோப்பத்தான்விலங்கினங்களுணர்த்துகிற்குங்
கருஞாளிக்கொண்டுங்கானெல்லாந்திரிதந்தான், (சு)

தானவாதரக்கரிமாசாரங்கமெய்கிடிநி
தானமாவனவிருகமனைத்தையுந்தன்சரங்கொண்டு
தானமாகொலைபுரிந்துதடவரையேயெனக்குவித்துத்
தானமாவலிகையேற்றான்மருகன்பொறைசார்ந்தான். (எ)

இப்பொறைதான்பசுந்தமிழுக்கெழில்வடாதெல்லையெனச்
செப்பநிலவியதென்றுஞ்செழுந்தவத்துக்குறுமுனிவற்
கப்பரைநல்கியகுமரனருந்தமிழையறிவுறுத்துந்
திப்பியமால்வரையென்றுந்தெரியானாய்த்திரிதந்தான். (அ)

நிழலேபோலவ்வரசைநெடிதுதொடர்தருமெயினர்
கழலேறுகாலினர்தாங்கதுமெனச்சார்ந்தவன்குறிப்போர்ந்
தழலேபோனனிகொதித்திட்டலகில்விலங்கினம்படுப்ப
எழலேயுநெஞ்சத்தாரெல்லாருமியைந்தனரால். (கூ)

ஓடியெறிந்துவலையிருத்தியொருங்கிளைதுய்ப்பார்வைதனைக்
கடிதுவிடுத்தவைகலங்கக்கைக்கொண்டுபறையடித்து
நெடிதுகுறித்தவண்கோடுநேராதவிலங்கினமும்
படிநினைந்தாண்டெழுப்புவார்பரிசினைத்தென்றுரைப்பதுவோ. (கo)

துணையாகவந்தார்கள்சூழ்ச்சிதனிற்பிழைத்தவற்றைக்
கணையாலாருயிர்வாங்கிக்கரையிலிறும்பூதெய்த
இணையாருமில்லாதவேந்தனுமற்றங்கொருசார்
அணைவானன்றனந்தனியேயடவிமுழுதுஞ்சரித்தான். (கக)

கிழியீடுநேர்பட்டாலெனக்கேசங்கனமாக
விழியாலமெனலாகவில்லாகக்கொடும்புருவம்
மொழியாலைக்கரும்பாகமுகிழ்முலைமொட்டாத்தேமா
நிழலுடியிருந்தாளைநேராகக்கண்டனனால். (கஉ)

நீரோநன்னெடுவரையோநிலவுலகமனைத்துண்டான்
ஊரோவவ்வலாரிபரிந்தோம்புகின்றபேருலகோ
சீரேயுநெடும்பாந்தள்செறிபிலனோவின்னரென
ஓரேனாலென்னுயிரையொருங்குவருத்துநர்தமையே. (கங)

வேறு.

என்றான்றன்னைத்தான்மறந்தானிதயங்களித்தான்வேட்கையின்மேல்
நின்றானென்பதொழிந்தானென்னெடியதவமேயோவென்பான்
அன்றார்கலிநல்கியவமுதோவணைந்ததென்பானைம்புலனும்
வென்றார்போலுமவர்தமையேவிழைந்துநின்றான்விறல்வேந்தன். (கச)

ஒருவாறறிதிற்றேர்ந்தவர்தம்முழையேபகர்ந்தாண்டுரைசெய்வான்
மருவார்மலரோவானமுதேவானோரேந்தன்மனமகிழுங்

குருவார்மணிப்பூண்சசிக்கொடியேகுடிலத்தவருக்கோர்விருந்தே
திருவேநீயார்யார்பெற்றசெல்வமென்றான்செங்கோலான். (௧௫)

கற்பேபடிவங்கொண்டகனங்குழையார்நெஞ்சங்கவன்றவர்தாம்
பொற்பேபடிவங்கொண்டானைக்காணப்பெருவிருணிலராய்
மற்போர்வல்லாய்நானேதான்மணிப்பைந்நாகத்தவருலகம்
அற்பாற்புரக்குந்தனுசனென்பானரியதவத்துவருகின்றேன். (௧௬)

இனைந்தவரசனெழின்முகத்தைநோக்கியெம்மையாளுடையாய்
அனந்தனிகராமெந்தையைக்கண்டடைவொடென்னைமணம்பேசிக்
கனிந்தசொல்லான்மன்றலயர்விப்பானெனிற்காசினிமாட்டுப்
புனைந்தபுகழெய்துவையென்றுபுரையுமுரைத்துப்போந்தனரால். (௧௭)

கரந்தாருருவங்காண்கிலனுக்கன்னெஞ்சயர்ந்தான்காமுகனுத்
திரிந்தான்காமசரம்பாயத்தெருமந்தொன்றுந்தெரியானுய்ப்
பரிந்தாங்கவர்சொல்வழிச்சென்றேபார்த்துமென்னப்பறைந்தடைந்தான்
தருந்தாருவனுன்பரிவாரந்தனதுநாடுசெலவிடுத்தே. (௧௮)

வேறு.

கண்டுசென்றுதனுசன்கழல்வணங்கியெதிர்நின்
றண்டர்வாணனெனலாமனகநின்புடைவரும்
புண்டரீகைபொருவும்புனிதைதன்னைவதுவை
கொண்டுநின்றுசுகமெய்திடநினைக்குறுகினேன். (௧௯)

என்றியம்புமரசன்குறியெனைத்துமினையோன்
றுன்றுமாமுகனுரைத்திடவுணர்ந்துதுயர்தீர்ந்
தின்றுநுன்வரவுநல்வரவதென்றுரைசெய்தே
மன்றலெய்திடவுரைத்தனனம்மாசுணவிறை. (௨௦)

மன்றலெய்தியொருமாமதிமுகத்திருவினோ
டன்றினன்குவிழைபோகமயராவலகிலுள்
ஒன்றியின்னணமயர்ந்துசுபவோரையியைய
நன்றுமஞ்சனொருவன்றனையுநல்கினரரோ. (௨௧)

ஆழிவாயொருசலஞ்சலநிகர்க்குமமைதி
தாழவேயொருமகக்கொடைதனைத்தருகுவார்
காழிமாநகர்வருங்கவுணியற்பெறுமெழில்
வீழிவாய்ப்பகவதிக்குநிகரென்றுமிளிர. (௨௨)

உச்சிமோந்தனருகந்தனளுவப்பெறுவதோர்
நச்சுமெய்த்தவமஃதியாதுகொலெனுநவிலுவார்
பிச்சனுயினனிவற்பெறுபெருந்தகையிதோர்
வைச்சசேமநிதியென்றுளமகிழ்ந்தனரரோ. (௨௩)

மைந்தனல்கியதறிந்தமடவார்பலருமே
சிந்தையாரமகிழ்வெய்தியரன்றெய்வவுருவே
வந்ததென்னவறியாதவர்வழுத்தினர்களால்
முந்தவன்னதுனைசெய்யமுயல்கிற்பதெவரே. (உச)

ஆடிநெய்த்திருவிழாவினையயர்ந்தவனிசெய்
நீடிருந்தவமெனப்பலருநின்றுபுகல
நாடுநல்லனநிமித்தமுளவாயினநயந்
தோடினர்விழுந்தாருவகைகொண்டவரரோ. (உரு)

ஐயிரண்டொடுமிரண்டுதினமாகவவர்தாஞ்
செய்யபொன்னனையமாதருசெல்வனையெடுத்
துய்யவந்தவிறைவேயெனவுகந்துமறைசொல்
தெய்வந்னெறிநடாத்தினர்திறம்பவிலராய். (உசு)

வேறு.

தலங்காக்குமனைய்ரெலாந்தலையெடுப்பக்குறும்பெல்லாஞ்
சலங்காக்குநெறியின்றித்தாமொழியத்தக்கோராம்
புலங்காக்கும்புனிதர்தமைப்புரப்பானையினியவர்தந்
நிலங்காப்பாரென்றவர்க்குநிலங்காப்புமிட்டனரால். (உஎ)

பரியிரதங்கரிபாளென்றுரைத்தகடற்படைகொண்டு
கரிசுபுரிதருங்கொடியகயவரொடுங்கலந்தமர்செய்
பொருவரியபுரவலனர்புனிதனடியேகருதித்
திரிதருமச்செயலேபோற்செங்கீரையாடினர். (உஅ)

நாட்டுமறையுட்பொருளைநலமலியும்வடமுல்லை
காட்டுமணிவிளக்கதனைக்காட்டியவன்றனையன்பி
னூட்டியவனருள்பெறுமெம்மனையர்பெருமானைச்சீ
ராட்டியகைத்தாயருந்தாலாட்டிமகிழ்ந்தனரம்மா. (உகூ)

கைப்போதுசென்னிவயிற்கவினக்கடன்ஞாலத்
தொப்போதகில்லாவுயர்மாசிலாமணியை
முப்போதுமேத்திமொழியவொருமூவுலகுந்
தப்பாதுகாப்பாருஞ்சப்பாணிகொட்டினர். (௩0)

காவாயென்றுலகெல்லாங்கனிந்தடையவும்புனிற்றுச்
சேவாரும்வெல்கொடியார்தெய்வவருள்கொண்டுபகை
மேவாதுகாக்கும்விறல்வேந்துமினிநட்பை
வாவாவென்றுரைப்பதுபோன்மதியதனைவாவென்றார். (௩க)

பெருமுத்தர்வழிபாடுபெரிதுஞற்றவொருவேயின்
வருமுத்தந்தனையன்பின்வழியன்றிக்காணரிதாம்

பரமுத்திதனைப்பயக்கும்பரம்பனைக்காண்பானா
ஒருமுத்தநல்கென்றுரோருமுத்தநகையன்னார். (௯௨)

வம்பமருங்குறும்பகற்றுமாமாசிலாமணிதாட்
செம்பதுமமுடிபுனைந்துசெய்யகோல்கரங்கொண்டு
மன்பதைகாத்தடையலர்கள்மணித்தேரையுருட்டுகிற்குஞ்
செம்பியன்சேய்செய்யசிறுதேருருட்டுவாரானார். (௯௩)

வேறு.

நாகராசனுநாகமாமுலைக்கொடிநல்கியசுதற்கம்மா
பாகசாதனன்சசிவயின்மகப்பெறும்பரிசெனமகிழ்வெய்தி
யோகசாதகன்மங்குணித்தருமறையுரைத்தவாவவ்வேந்துக்
காகநாடியகன்மமுமுஞற்றினனஃதியம்பிடவற்றே. (௯௪)

இன்னவாறவனுஞற்றியவேலையினிரும்புனனன்னுடன்
றன்னதாருயிரன்னவம்மடவரறன்னையன்பானோக்கிப்
பொன்னனையுனைப்பிரிந்திவணேகிடப்புந்திவைத்தேனென்றான்
அன்னதற்கவன்றிருமுகநோக்கிமற்றணங்கவனுரைசெய்யும். (௯௫)

எனைவலிந்துவந்தெழின்மணம்புணர்ந்தனையிருமையுந்தரவல்ல
தனையனைக்கனிந்துதவினைபிரிவெனுந்தகைமைசார்துயர்தந்தாய்
அனகநிற்கொருநீதியுமாவதேயாழகிதென்றொருமைந்தன்
புனைவருந்திருப்புணரகிலாதிவண்போதுமோபுகலென்றாள். (௯௬)

மனைவியுள்வெயர்த்தியம்பியமாற்றமம்மன்னவன்றான்கேட்டு
மனநெகிழ்ந்தவண்மாழ்கியென்மடக்கொடிமற்றுனைமணஞ்செய்வான்
நினையவந்ததுமூழதிற்சாலவோர்நிகளமதிலையன்றே
தனையன்வேறுளன்வேறுதாரத்தினேஞ்சாற்றுவதென்னென்றான். (௯௭)

சேயனிகழ்ந்ததும்வினைவழியாவருந்திறம்புதல்வழக்கன்றால்
மயின்முறைக்குலத்துரிமையைமறப்பதுமன்னுரிமையுமன்றே
அயின்மலர்க்கரத்தவனுன்மாமகனெனவரும்புவியுரைக்கும்போ
தயனினைப்பயனிலையென்மொழியன்பொடுங்கேளென்றான். (௯௮)

நானளிக்குமித்தொண்டையங்கொடிதனைநல்லதோர்குறிப்பாகத்
தானெறிந்தனனெனிற்கடல்வழிவிடுந்தனக்கொருகவலின்றே
நானவார்குழன்மடந்தையிஞ்ஞாலமேயன்றிநாகமுமேனை
யானநானிலமனைத்துமோர்குடைநிழலளிக்குவனிவனென்றான். (௯௯)

அரசர்கோமகனகன்றனனகன்றபினருந்ததிபோல்வாரும்
பரிவினீன்றதன்றுதைதனிசைவொடுபார்மிசைபடர்ந்தாரால்
பருணிதத்திருமகன்றனதன்னைசெர்ல்பாணியாதலையாழித்
திரையிற்றொண்டையங்கொடியெறிந்தனனரன்றிருவடிநினைந்தன்றே. (௱)

ஊத்தைவாய்ச்சமண்கடல்வயின்விடுத்திடவும்பாரன்றிருநாம
வார்த்தையஞ்செழுத்தாலொருகற்புணைமருங்கில்வந்தெழுகின்ற
சீர்த்தநந்திருநாவினுக்கரசெனச்செம்பியன்றிருமைந்தன்
மாத்தடங்கடற்றிரைவயிற்றோன்றியம்மருங்குறுங்கரையுற்றான். (சக)

திரைகடந்துவந்தடைந்ததொர்பரிசினாற்செம்பியன்றிருமைந்தன்
றிரையனென்றிடச்சிறந்தனன்றொண்டையாற்செறித்தலாற்றிரிபின்றிக்
கரைதருந்தொண்டைமானெனயாவருங்கட்டுரைத்திடலானான்
றெரிமினென்றனன்சூதனும்பின்னுறுஞ்செயலவர்க்குரைசெய்யும். (சஉ)

கங்கைவார்சடைக்கடவுடனருளினாற்கடற்றிரைகையேந்தி
அங்கண்மாநிலந்தனில்விடுத்திடவஃதறிந்தசெம்பியர்கோமான்
துங்கமைந்தனையுச்சிமோந்துயிர்த்தருஞ்சுடர்மணித்தேரேற்றிச்
சிங்கவாதனக்குரியனென்றுரைத்தனன்செழும்புவிகளிதூங்க. (சங)

வந்தமைந்தனைக்கண்டவம்மாநகர்மாந்தர்கள்மதிகண்ட
சிந்துவென்னமாமழைமுகில்கண்டதொர்செழும்பைங்கூழெனநின்றார்
அந்திலார்புனைசெம்பியன்றானுமம்மகவினையன்பாற்கொண்
டந்திவானிறமேனியானருளினனகனிலம்புரக்கின்றான். (சச)

வேறு.

தன்னருமைத்திருமகன்றன்பேராற்றல்பெரிதுணர்ந்ததண்பார்வேந்தன்
பின்னெய்துவனவனைத்துமுன்னோர்ந்துகரிகாலப்பெருவேந்தன்று
முன்னடைந்துவென்றுண்டதண்டகநாடாள்கவெனமுடியுஞ்சூட்டி
மன்னுரிமைச்சுற்றமுந்தந்தவன்றனைச்செல்கெனவாணைவழங்கினனால். (சரு)

வேறு.

தரையன்பினிலாண்டருடாதையைத்தானிறைஞ்சித்
திரையன்விடைபெற்றுவடாதுசெலத்துணிந்து
பரையன்றொருசேய்க்கெழின்மாமுலைப்பாலளித்த
உரைசெய்சிறப்போங்கியகாழியுவந்தடைந்தான். (சசு)

ஆனந்தநடம்புரிந்தாருயிர்க்கின்பநல்குந்
தானந்தமில்லதொருசீர்த்திதழைத்ததென்றுங்
கானந்தயங்குகுழனுடியகாட்சிமல்குந்
தேனந்துசோலைத்திருத்தில்லையிற்சென்றகன்றான். (சஎ)

புகலிக்கிறைவன்வதுவைப்பெயரைப்புகன்றிட்
டகிலத்தவரும்வரக்கூயவரெய்தவன்றே
புகலற்கரிதாஞ்சுகபூரணப்பேறுநல்கு
நகரென்றுரைசெய்வியன்றானநயந்தகன்றான். (சஅ)

பூத்தாறுவலஞ்செயுநன்முதுகுன்றமேவி
அத்தாவமலாவருளாளவெனவரற்றிக்
கைத்தோர்மலநாடியகண்ணுதல்பாதமேத்திப்
புத்தேளிர்நாடும்புரிசைப்பதிபோந்தகன்றான். (சகூ)

மயனாடியமாலயன்மண்ணினலமந்தன்றே
அயனாடியநற்கிடியன்னமெனத்திரிந்திட்
டுயனாடியநீளழற்குன்றமுவந்துகண்டு
வியனாருமாதைப்பதிசேர்ந்துவிரைந்தகன்றான். (ருo)

மறைநான்கும்வெற்பென்னவிளங்கவுமாசிலாத
துறைநான்குநயந்தருள்கிற்பதுதூய்தவத்தோர்
குறைநாடியதீர்ப்பதுவாங்கழுக்குன்றமென்னத்
தறையோதியநன்னகமெய்தித்தணந்துபோனான். (ருக)

வேறு.

செம்பியன்றன்றிருநாடுசேர்ந்துதண்டகனுளச்சிறந்துநாளும்
அம்புவியிற்றண்டகநாடெனக்கிளத்துமந்நாடுகாடுமண்டிக்
கம்பமேவியபெருமான்றிருநகரீதெனக்காண்டற்கரிதேயாகப்
பம்பியசேணையுந்தானுமக்கானமுழுவதுமேபடர்ந்தானம்மா. (ருஉ)

அவ்வேலையங்கெடுங்கான்குறும்படர்ந்துசெறிந்துநாலாறுகோட்டந்
தவ்வாதுபிரிவெய்திச்சிறுகுடியேதுவன்றியவண்சரிப்போர்தம்மை [றும்
வெவ்வேகமொடுதொடர்ந்திட்டாறலைக்குஞ்செயலதனைமேற்கொண்டென்
இவ்வாறீண்டுடல்வளர்த்துத்திரிதந்ததிகபரமுமிகந்துமன்னே. (ருங)

தாயுரையின்படிவந்ததிரையனெனுந்தொண்டைமான்றன்னோடுற்ற
மேதகுநாற்படைகொண்டுநூழிலாட்டயர்வுள்ளமேற்கொண்டன்னோன்
காதுநெடுங்குறும்பிரவிகண்டவிருளெனக்கழித்துக்காஞ்சியென்னு
மாதிநகரம்புதுக்கித்தன்னரசுக்கிடங்கொண்டானவனியாள. (ருச)

இன்னநகரெழுநகரத்தொன்றெனயாவரும்பேசவிலங்காநிற்கு
மன்றியுமத்திசைமுகனாலஞ்சிக்கப்படுவதனாலைவதாகி
மன்றவுமையறம்புரிந்தமாநகரமெனநன்குவயங்குபீட
மென்றவெவ்வெட்டினின்மலருட்கமலமெனத்திசைபோயங்கிருந்ததன்றே. (ருரு)

வேறு.

இன்னதொன்னகரென்பதிங்குணர்ந்தநல்வேந்தன்
அன்னநன்னகர்புதுக்கெனவலுறதரவாங்கு
மன்னுசீர்மலிகம்மியன்வகுத்தனனென்ப
இன்னனெஞ்சினேனெடுத்தெவனுரைப்பதப்பெருமை. (ருசு)

சமயமாதியமூவகைத்தீக்கையுஞ்சாந்தோர்க்
கமையவேபுரிந்தாகமநெறியினுன்மார்த்தஞ்
சமைதரப்பரார்த்தம்புரிகின்றதண்ணளியா
னெமையிங்காள்சைவவந்தணரிருக்கையுமியைத்தான். (ருஎ)

சிக்கைமந்திரமுதலியவங்கங்கடேர்ந்து
தக்கமாமறைநான்கையுமோதித்தாழ்சடில
நக்கனரடித்தொண்டரைநாடுமந்தணர்வாழ்
மிக்கிருக்கையேயோர்புறமிளிர்தரவிதித்தான். (ருஅ)

யானைதேருடனிவுளியேற்றம்பலதேர்ந்து
தானையாவையும்பயின்றுதம்பகைப்புலம்பொருது
மானமாவனதன்மையாய்ச்செறிதருமன்னர்
ஆனமாமரபோருறைவீதியுமமைத்தான். (ருகூ)

தங்கணெய்துநர்மணியினைத்தருதியென்றுசாவ
அங்கதற்கினமாவனவுண்டெனவறைவார்
தங்கைதந்தவான்பொருள்பிறர்தம்மதேயானுந்
தங்கைத்தென்றேனும்வசியர்சாரிருக்கையுஞ்சமைத்தான். (சுo)

வருவிருந்தினிதோம்பியேவைகலும்வானும்
பெருகுநற்புகழ்கூறிடப்பிறங்குமெய்ஞ்ஞான
மருவுமன்பொடுகொடைபலவழங்கியவேளாண்
மரபினோருறையிருக்கையும்வரம்பிலவமைத்தான். (சுக)

நாற்பெருங்குடிவீதியுமன்றியந்நகரின்
பாற்படும்புறக்குடியுறைவீதிகள்பலவும்
ஏற்பவேயமைத்திறைமகனிடத்தினிதியம்ப
மேற்படுங்குலவேந்தனுமுட்புகவிழைந்தான். (சுஉ)

வேறு.

திசைமுகனலஞ்சிக்கப்படுதலினுற்சிறந்தோங்கும்
இசைகெழுமுகாஞ்சிநகரெனநிலவுமாநகரைக்
கசிவுறுமெய்யன்பினெடுங்கடற்படையினேடிறைஞ்சி
நசையின்வலம்வந்தொருதனன்மனையினுட்போந்தான். (சுரு)

வேறு.

அரசர்தம்பிரானரசரொடமைச்சரொடெய்தி
அரியணைக்கணுங்கமர்ந்தனனடங்கலர்தம்மை
வெருவுறப்புரிந்தியாவரும்விழைதரவுஞற்றிப்
பொருவருந்திகிரியைநனியுருட்டினன்புரந்தான். (சுச)

இனையவேலையின்முல்லைமாநகரெலாமடவி
துன்னியேதளவான்மறைபட்டதுதோன்று
தின்னமாநகரெய்தினனென்றுமேற்கடலிற்
சென்றுமூழ்கினன்சேனைகாவலர்க்கிதுசெப்பும். (௬௫)

என்றுதான்கடலாழ்ந்தனனின்றிவண்வந்து
குன்றவில்லிதன்றளிபலகுறித்தடைகிற்பேஞ்
சென்றெனத்தரியலர்தமைக்கடந்தசெவ்வேலான்
அன்றுரைத்ததுகேட்டனரணிககாவலர்கள். (௬௬)

அணிகவேலையையிறுத்தனரரசர்தம்பெருமான்
கனிவினாலந்திக்கடன்றனைமுடித்துணவயின்று
பனிநிலாக்கதிர்பாவலாற்பான்மதிமுல்லை
எனுமலர்க்கொடியாண்டுமேமணங்கமழ்தரலான். (௬௭)

துளக்கிலாநெறிதோன்றலுமன்றவண்வந்த
இளைப்பினானயர்வகலவோவெழின்மணித்தவிசிற்
களிப்பினாலொருதான்கண்டகாட்சியைநினைந்திங்
களக்கலாயினனங்கிராமுழுவதுமம்மா. (௬௮)

இனையவேலையிலேந்தலுக்கெண்டிசைதிசைப்ப
மனநடுங்குறக்கேட்டதோர்மாமணியோசை
அணிகவேலையினடுவணுங்கறிதுயிலமரும்
புனமலர்த்துழாய்ப்புயலெனக்கண்வளர்பொழுது. (௬௯)

இங்கொராலயமிருந்திடவேண்டுமெம்பெருமாற்
கங்கருத்தயாமஞ்செய்வதாகின்றதென்னுச்
சங்கராசிவசந்திரசேகரசருவ
யங்களாகரவென்றுகையுச்சிமேல்வைத்தான். (௭௦)

என்றுதோன்றினனியமங்கண்முடித்தனனேந்தல்
அன்றமைச்சரைக்கூயவர்க்கன்பினுணர்த்திக்
குன்றவில்லிதன்புனைமணிக்கோயிலொன்றீண்டு
நின்றதாகுமாலெனச்சிலர்நிகழ்த்துவாரானுர். (௭௧)

ஐயகேளிவணம்பிகாபதியினிதமருஞ்
செய்யமாமணியாலயமீங்கிலைதேரின்
வெய்யராங்குறும்பர்களுறைகிற்பதுமேனுள்
வையமூர்ந்துந்தைபொருதஜேர்மலையரணுண்டால். (௭௨)

அன்னதாவதுபுழலெனப்படுவ்தஃதைய
இன்னுதன்மையதென்றிவணெடுத்துரைப்பரிசால்

இன்னல்செய்கிற்போருறையுளினெழின்மணியோசை
என்னலாகுமற்றதன்சிறப்பறிந்தவாறிசைப்பாம். (௭௩)

வேறு.

கங்கைகுலந்தனில்வந்தோர்திருத்தில்லைநடத்திறைவன்கருணைவாழ்வாம்
அங்கணன்முன்பெற்றானுக்கெனக்கவியொன்றுரைத்தனுப்பவன்பாற்றீக்கை
இங்களவில்பேரருளாற்செய்தொருவீடளித்தபிரானிசைத்தசீர்த்தி
தங்குசேவையர்பெருமான்மரபினோரெஞ்ஞான்றுந்தழைப்பதம்மா. (௭௪)

கோட்டமிளங்காடேற்றுக்காடாமூர்சடிசைபல்குன்றுவெண்குன்
றீட்டுமெயில்சிறுகாரையீக்காடுகாலியூர்படுவூரீதூர்
நாட்டுபுழல்சந்திரிகைசெங்காடுகுணபத்திரநயக்குஞ்செம்பூர்
வாட்டமில்பையூர்களத்தூர்வேலூர்வேங்கடம்புலியூர்மணவூர்தாமல். (௭௫)

எனப்படுமிக்கோட்டத்திற்புழற்கோட்டந்தனைக்கைக்கொண்டின்னல் சய்வார், அனைத்துயிர்க்குமவரோணன்வாணனெனவுலகெல்லாமறையுநீரார், உனற்கரியபெரும்பொருளெலாங்கவர்ந்தார்பகைப்புலம்வென்றோங்கி வாழ்வார், புனக்குறவர்மடமானைக்கவர்ந்தானைப்பொருவாராய்ப்புரைசெய் கிற்பார். (௭௬)

பவளத்தூண்வெள்ளெருக்கந்தூணினொடுவெண்கலசபாடமோங்குந்
தவளநெடுமதிலரண்கொண்டொருகொடுங்கோலோச்சிடுவார்தம்மாலெந்தா
கவளங்கொள்கொலைக்களிற்றினுரியான்றன்வழிபாட்டிற்காலமின்றி [ய்
அவமதில்யாங்கழிக்கின்றேமெனவமைச்சருணர்ந்தரற்றவரசன்கூறும். (௭௭)

இன்றடித்தமணியோசையீதெனத்தேர்ந்தனமென்னவெடுத்துரைப்ப
நன்றதனைக்காணுமாநசைகொண்டாமெனத்தானைநடந்துசெல்லக்
குன்றனையகுஞ்சரமூர்ந்திந்திரனேயெனவேகக்கொடியோர்தாஞ்செய்
குன்றின்வயினத்திரையனெய்தினனாலெனச்சினந்தார்கோனுகன்னார். (௭௮)

இத்திரையன்றிருத்தாதைநமைப்பொருதிங்குடற்றவிவண்கரந்தேமின்று
சுத்துதிரைவாரிதிபோல்வருந்தானையுடையானைக்கண்டுமாழ்கல்
எத்துணையுங்கொடியதாம்பொருவதேசிறப்பென்னவெண்ணியன்னோர்
வைத்திருந்தபடையானும்வயிரவனாருளானுமலைவான்வந்தார். (௭௯)

அரசர்பிரான்றான்கண்டுசாந்தமொழிபலபகர்ந்துமதுகேளாது
பொருவதேகடமையெனவில்வளைத்துப்பகழிதனைப்புயல்போலேவ
இருபடையும்பொருதுழியாண்டரையர்பிரான்படைத்தலைவரேவாகிற்குஞ்
சரமதனாற்கொலைவாளாற்பிறபடையாலவண்பொருதல்சாற்றற்பாற்றோ. ()

வேறு.

இழந்தார்தலையிழந்தாரிருகைகாலொடுசுடர்கள்
இழந்தார்பலர்மலையன்னபுயந்தானிகல்புரிவார்
அழிந்தாரினியாஞ்செய்குவதென்னேயெனவரற்றிக்
கழிந்தாரொருவேந்தன்படைகண்டான்முடிவெனவே. (அக)

வாணன்படைவாளுள்கழிவாராய்மனமழியச்
சேணின்கண்கரந்தேநெடும்போர்செய்தனர்தீயோர்
காணும்பரிசிலராய்த்திரையன்கார்முகக்கணையால்
நாணும்படிசுழல்காலின்முன்பஞ்சாயினர்நடுங்கி. (அஉ)

வெந்திட்டனராலன்னவர்வியன்மாமலையரணிற்
சென்றிட்டமுறத்தாம்வயிரவன்சேவடிமலரை
உன்னிக்குறையொன்றுங்குறையாதோதவோர்பூதந்
தன்னைத்தரவந்தாரறைகூவித்தகைதரவே. (அங)

இன்னோர்வரவினைவேந்தனுக்கெடுத்தோற்றர்களியம்பச்
சொன்னார்புயவேந்தன்பொருதற்காற்றலிலாது
சென்றோர்வருமாறென்னைகொலென்றேதிசைகடல்சூழ்
உன்றாரணிதனிலென்றிரும்பூதெய்தியவந்தான். (அச)

படைமன்னவனொருநாற்படையொடுபற்றலர்தம்முன்
விடையென்னநடந்தேகினன்வேல்வேந்தனைநாடி
இடியன்னமுழக்கோடொருபூதம்மெதிர்வந்தே
அடைவிற்குகைநிகர்வாயினையங்காந்தடைந்ததுவே. (அரு)

அரசன்படையொருவந்தமழற்கட்பெரும்பூதம்
விரவும்பசிகொண்டோனனம்வேட்டுண்ணியசெயல்போல்
ஒருகையின்முகந்துண்டதுவெருண்டேயுலகுடைய
குரிசில்வியன்படையாழுடையார்கோனகர்ப்பொருவும். (அசு)

கண்டான்படைவேந்தன்கனவிற்கண்டதொர்காட்சி
தண்டாவலிமிகுதானையிற்கண்டேநனியஞ்சி
அண்டாவொருகல்லானையுமயிலக்கரும்பிடவும்
உண்டாயதொர்செயன்மானுமிதென்றேயுளங்குழைந்தான். (அஎ)

தென்னன்முகில்சிறையிட்டதொர்செயலென்னவெனைத்தான்
இன்றிக்கொடியோர்வெஞ்சிறையிடுவாரெனநினைந்தே
மன்னன்கரியினையூர்ந்தொருவண்பாசறையெய்தச்
சென்னிக்கிளமதிசூடிதன்செயனன்குணர்செய்வாம். (அஅ)

வேறு.

முல்லைக்காட்டின்வழியாகமுடிவேந்தர்பிரானணைந்திடவும்
முல்லைக்கொடியிற்கரந்திருக்குமுதல்வன்பகைவன்புலக்கஞ்சி
ஒல்லைமீளுமிகுபக்குவனுக்காசானுயொருங்கெளிவந்
தல்லலறுப்பான்போற்றெண்டைமானைத்தானும்வலிந்தாள. (அகூ)

உள்ளங்கொண்டேயவையர்பிரானூர்ந்துவருமவ்வும்பறணைக்
கள்ளம்பயிலாமுல்லைநெடுங்காட்டிற்றகையக்கடகளிறு
வெள்ளம்பயிலுஞ்சடைமுடியார்விரகாற்றகைந்ததன்மையினுன்
எள்ளினிடனுங்கால்பெயராதிருந்ததனையிறையுணர்ந்தான். (கூ0)

அந்தோசிறியோர்சிறைவயினுனகப்படாமேயுயிர்பிழைத்து
வந்தேன்வந்துங்கொடுந்துயரமதனுக்கிரட்டிவாய்த்திடவே
நொந்தேனென்றேயகங்குழைந்துநூலிறேடைக்களிற்றின்மிசை
வந்தான்றுனுமாங்கிருந்துமவ்வற்கொடியைவாளோச்ச. (கூக)

அரசனேச்சமற்றஃதம்மலரோனறியாவரும்பரம
துரியமுடியிற்றுலங்குமருட்டோன்றன்முடிமேற்பட்டவுடன்
குருதிசொரியக்கண்டென்னேகுறித்திங்கேழைகுயிற்றினனென்
றுருகியவன்முன்சோதிப்பவுவந்துகண்டானிறையுருவம். (கூஉ)

வேறு.

அயர்ந்துவீழ்ந்தெழுந்துபுரண்டாராதகாதலுடன்
வியந்தென்னைநினைந்தென்னைபுரிந்தனமாலெனவியர்த்துப்
பயந்திருகண்ணீர்சொரியப்பரம்பரனைத்தான்றழீஇ
மயர்ந்துநம்பாவென்னமம்மரினுற்புலம்பினனுல். (கூங)

வள்ளாலிக்கொடியேன்றன்வாளினுன்வெட்டுண்டாய்
எள்ளாதஞானத்திருமேனியெம்பெருமாஅன்
உள்ளாயிலையாயிருப்பாயுடையாயூர்
கொள்ளாக்கொடியேன்கொடும்பாவியானேனே. (கூச)

மறையோடயனுலம்மாலான்மனமதனுற்
குறையாதவாக்காற்கூறுமளவையினுல்
அறியாதநீர்மையாயந்தோயானேயன்றிச்
சிறியேன்வழியுமேநிரகிற்சேர்ந்ததுவே. (கூரு)

வேதனென்பானெத்தனையோவேதனையாற்றுனுழந்தும்
போதமிழந்தும்புணர்வரியபொன்முடியை
ஆதனேனிப்பரிசாற்காணவரும்பாவம்
எதுபுரிந்தேனெளியேனுணரேனே. (கூகூ)

பூதாதையரெல்லாமூவாமுதலேநின்
பாதாரவிந்தம்பழிச்சிப்பசுத்துவநீத்
தோதாசில்வீடெய்தியோங்கினரின் றிச்சிறியேன்
நீதாகொடியநெடுநரகிலாழ்ந்தேனே. (கூஎ)

வாட்போக்கிமன்னன்வடுப்பட்டுநின்றமையான்
வாட்போக்கிதன்னில்வயங்கினேயன் ஞனுமுன்றன்
ருட்கேயன்பெய்தித்தனியமர்ந்தானந்தோநா
ளுட்போக்கிவாளாநலிந்தேனுடையானே. (கூஅ)

கண்சுமந்தநெற்றிக்கரும்பேதனிக்கூடன்
மண்சுமந்தன்றேநெடியமாறன்பிரம்படியாற்
புண்சுமந்தும்பாணன்பொருட்டால்விறகுசடைக்
கண்சுமந்துநின்றதுமிக்காரியம்போலாகாவே. (கூகூ)

சொல்லடியானென்றுந்தொடர்வரியாயன்றொருவன்
கல்லடியும்பார்த்தன்றன்கையிலுனேச்சுமொரு
வில்லடியும்பட்டனேயிவ்வேலேந்துமாபாவி
புல்லியவாளோச்சும்பொறுத்தாயெம்புண்ணியனே. (க00)

இன்னவபசாரமியற்றியுமெந்தாயெனுயிர்
தன்னைவிடாதந்தோதவிக்கின்றேன்றுசரதி
மன்னுசுதன்பரவும்வள்ளாலிம்மாபாவி
என்னவிழைத்தாலிடும்பையெலாம்போமின்றே. (க0க)

காக்கைதனக்குக்கரைந்தேயென்பொல்லாத
ஆக்கைதனையிரையாயாக்காரோசெக்கிலிட்டுப்
போக்ககிலாரோவுலையிற்போட்டுமுடிக்காரோநான்
மீக்கொடியனுமுறையான்வேறென்புரிவதுவே. (க0உ)

ஐயவரசனெனக்கொண்டவனியுளார்
செய்யநினையார்சிறியேனைத்தீவினையேன்
வெய்யவாள்கொண்டுவீழ்த்துவதேநன்றெனத்தேர்ந்
துய்யுநெறியென்றுடைவாளுருவினனே. (க0௩)

தாயரெனநாடித்தானுருவியேயொள்வாள்
மாயமிடற்றிலவன்வைத்தரியவேதொடங்க
மாயனறியாமணிமிடற்றுமாதேவன்
தூயவறவிடைமேற்றோன்றியேகட்டுரைக்கும். (க0ச)

மைந்தகேளென்றுமாசுடையேமல்லேமால்
தந்தனைநீவெட்டெனினுந்தாரணியினெஞ்ஞான்று

முந்துமாமாமணியென்றேமொழிந்து
வந்தனனுலெல்லாமுடையான்மலைவில்லான். (க0ரு)

வந்தவன்றன்கைப்பிடித்துமால்விடையைவிட்டிழிய
அந்தரிமாதங்கியமலைவலத்தேயமர
நந்திமுதலோரிடப்பானண்ணவமரரெலாங்
கந்தமலர்மாரிகாரென்னத்தூர்த்தனரால். (க0சு)

கண்டானவ்வேந்தன்கடவுளையுள்ளங்கூர்ந்து
விண்டான்றுதிகள்விளம்புவானெம்பெருமானன்
மண்டான்முதலாவரம்பிலாமாபூதங்
கொண்டாயுடலாக்குலவும்பரமேட்டி. (க0எ)

பாவகாநீங்கும்பரமேபசுபோதச்
சோவெறிந்தமுக்கட்சுடரேயெனையின்று
மேவுதுயர்தெறத்தமேலோனேநின்றனிரு
பூவடியேயென்றும்புகலென்றடைந்தேனே. (க0அ)

ஆறுறகன்றவருளாளாவம்பிகையோர்
கூறுமதியின்குழவிமுடிபுனையும்
நீறுடுமேனிநிருத்தாகொடியிடையோர்
கூறுய்நல்வெள்ளிக்குவட்டையுடையானே. (க0௯)

கல்லைக்கனிவித்தகட்டழகாவிக்கொடியேன்
சொல்லைத்துதியென்னக்கொண்டசுடரோனே
தில்லைப்பதியாய்செழுமுல்லைவாயிலமர்
அல்லைப்பொருவுமிடற்றையாவருளாயே. (கக0)

என்றுபுலம்பியிடருறுவான்றன்முன்னர்
கன்றின்விளவெறிந்தான்காணுப்பெருந்தகையு
மன்றவுணராய்மாசிலாமணிநாமென்றே
என்றவுரைத்திட்டுமைவலப்பாலேய்ந்துளைக்கும். (கககக)

இக்குஞ்சரமூர்ந்தெழினந்தியைத்துணையா
மிக்குச்சென்றுன்றன்விரவலரைவென்றமது
பக்கலன்புற்றுப்பணிசெய்வாயென்றுபணித்
தக்கணமேயெம்மானருளுருவந்தான்கரந்தான். (ககஉ)

தொண்டைமான்வெய்யகடத்தும்பியிவர்ந்தக்கணமே
தண்டலிலாக்கொடியதகைவிலாருரெய்தி
மண்டியேநொச்சிதனைவளைத்தான்மாதவத்தின்
ஒண்டணிநந்தியுங்கரிக்கநேர்ந்ததுவே. (ககங)

வயிரவன்றன்வன்பூதமாய்ந்திட்டவக்கணமே
எயிலணையுமன்னனிடத்தோணன்வாணனொடும்
வயிரங்கொண்டெய்தவல்விசிகத்தாலழித்துக்
கயிலையரன்றண்ணருளாற்கவலகன்றுநின்றனனே. (ககச)

அந்தமிலாமாதவத்தரசர்பெருமானுஞ்
சிந்தையுவந்துசெயலற்றெமையடர்க்கு
முந்தைவினையொழிக்கமுன்னின்றுனென்றுபுகழ்ந்
தந்திவணத்தெம்மருளாளற்போற்றுமால். (ககரு)

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

மணிகொண்டபஃறலையமாசுணத்திற்றுயில்கூருந்
திணிகொண்டவரைநெடுந்தோட்செங்கண்மரகதமுகிலும்
அணிகொண்டகமலமலரமர்ந்தொருமுச்சகம்படைக்குங்
கணிகொண்டநான்முகங்கள்கவினுமொருபெருந்தகையும்
விசும்பளந்தமணிமுடியும்வியன்மலர்ச்செஞ்சேறடியுங்
கசிந்தன்பினிலமாறிக்கலையனமுங்கேழலுமாய்
முனநாடியுணர்வரியமுதல்வமுல்லைவனமேவி
நினநாடுமடியவர்க்குநிறையருளும்புரிந்தோய்கேள்,

இவை எட்டுந் தரவு.

களபமதன்றுரித்துடுத்தகடவுணீவழிபடுமோர்
களபமதற்கருள்புரியுங்காதன்மையுளைப்பதுவே.
பெண்மயனீத்தாற்குதவும்பெற்றியனீநினையடைந்த
பெண்மயனீவாற்குதவும்பேருதவியளப்பதுவே,
மணிகண்டனெனமறைகள்வழுத்தொருநீமறையவற்கா
மணிகண்டுநல்கென்னமழைபொருவவழங்கினையே.

இவை மூன்றுந் தாழிசை.

மலரவன்வழிபடமருவியநினையிவண்
அலகிடலரியதொரளியுருவினை
உருவமொடருவமுமுருவருவமுமென
வருமொருபரிசினைமலிநிலையினை
கலைமறைபரவியகவினொடுநிலவிய
மலைமகளொடும்வரமருநெறியினை.

இவை மூன்றும் அராகம்.

ஆரணமாய்விளங்தோய்நீ-ஆகமமாயியைந்தோய்நீ
காரணமாய்நின்றோய்நீ-கற்பனையுங்கடந்தோய்நீ

இவை நான்கும் முச்சீரோரடியம்போதரங்கம்.

கானுநீகனலுநீ-கதிருநீமதியுநீ
வானுநீநிலனுநீ-வஞ்சமுநீதஞ்சமுநீ

இவை எட்டும் இருசீரடியோரடியம்போதரங்கம்.

(எனவாங்கு) தனிசொல்.

நேரிசை யாசிரியச் சுரிதகம்.

கருங்கடற்றுயில்கூர்கண்ணன்வாழுலக
மொரும்பதிதானெனுவாட்சிகொண்டனையால்
குமரன்வழிபடக்குழைந்துவன்றனைநீ
யமரர்சேனுபதியாக்கினின்றனையால்
பொன்மனைவிழைந்தவன்பொன்றிடாவண்ண
மன்பொடுமவனுக்கருள்சுரந்தனையால்
உடுக்களுக்கவர்தமுளத்துயர்தீர்தர
வடுக்கணுமையருள்வழங்கவாற்றினையால்
கண்ணிழந்திட்டகதிரவனெவர்க்கு
மெண்ணியதலைமையையெய்துவித்தனையால்
அராவணைதுறந்தவனருளியகுசலவர்
விராவுபேரின்புறவிளைத்துநின்றனையால்
கொடியமாமுனிவன்குறுகினனடைவான்
நெடியதோரின்னனீக்கினின்றனையால்
நாற்கோட்டும்பனுடிநிற்பரசிட
மேற்கோட்டமில்சுகம்விழைந்துநல்கினையால்
சகியுளங்கவன்றுசார்தரவவட்கே
நசையுறக்காதலனலம்புணர்த்தினையால்
விண்ணுடையமரர்வேந்துவந்தணைதர
நண்ணிநின்றின்பநலம்புணர்த்தினையால்
காதலியைக்கொல்கயவனுக்கிரங்கி
மாதயாவோடருள்வழங்கினின்றனையால்
பத்திபழுத்தபனவனுக்கன்று
வித்தகவீடுபேறளித்தனையால்
குலனெழுக்கிகந்தகொடியவன்றனக்கு

நலமந்தமில்சுகநல்கிநின்றனையால்
வேடுவனாகிவிசயனுக்கன்று
நீடுபாசுபதநினைந்தருணின்
பீடுகெழுபரிசுபேசவுமரிதே. (௧௧௬)

என்றுதுதித்திட்டெம்பெருமானல்லருளா
லின்றுகொடியோரினலகன்றேனெம்போலார்
நன்றுதவம்புரிந்தார்ஞாலத்தெனவவனும்
பொன்றுன்னுமாடப்புழற்பதியிற்புக்கடைந்தான். (௧௧௭)

வேறு.

அரசன்புக்கனனச்சிவாயிலிற்சென்றேயதிசயமெனைத்துந்தன்
இருகணாற்கண்டுவியந்தனன சனிடத்திலகிடும்பொருள்கொண்டு
பரவுசீர்முல்லைவாயிலையணுகினான்பானிறவிடைதானுங்
கரவதின்றியேதுணைசெயுங்காட்சியைக்காட்டிநின்றதுநாளால். (௧௧௮)

பின்னும்வேந்தனும்விதிப்படிமங்கலவாவிப்பேர்நீராடி
மின்னும்வார்சடைப்பிரான்றனைமௌவலம்வியன்கொடிமறைக்கப்பட்
டின்னறீர்தரவிருந்தவம்பிகைதனையிறைஞ்சியேநிற்கும்போ
தன்னவேலையின்வெரீஇச்சென்றதானையுமாங்கடைந்ததுமன்னோ. (௧௧௯)

அனையரோடவனந்தமாமால்திவனந்தனையகலாது
கனிவிஞனமதிறைவன்றன்பணிபுரிகடன்மையேபமீக்கொண்டு
பனிமதிச்சிலைமாடமார்கச்சியிற்படர்வதாச்சிலரேகக்
குனிசிலைக்கரசனுப்பினனொற்றரைக்கொணர்கெனப்பொன்னன்றே. (௧௨௦)

கொண்டுவந்தனர்செம்பொனைவேந்தனுங்கூயினனெடுங்கச்சன்
கண்டுவந்துகாணிறைஞ்சினனவன்றனைக்கருணையான்முகநோக்கி
மண்டுகாதலினியற்றுகென்றியற்றினன்மரபினெனன்பர்கண்மன்னோ
புண்டரீகன்மால்காணாப்பரம்பரன்புனிதவாலயமம்மா. (௧௨௧)

அண்ணலாலயமம்பிகையாலயமமைத்தனனதன்பின்னர்
எண்ணருஞ்சிறப்புறுசருப்பக்கிருகமியைத்தனனியைத்தந்தி
னண்ணும்வெள்ளெருக்கின்றாணமந்தாரளத்தினொ[illegible]னனன்றிப்
பண்ணுலாடிகாமண்டபம்பட்டிமண்டபம்பலநிருமித்தான். (௧௨௨)

நிருத்தமண்டபநிலவலங்காரமண்டபநிகழ்தருசீர்த்தித்
திருத்தகுங்கலியாணமண்டபமுதலாயினசெறித்தன்றிக்
குருத்தகும்பரிவாரதேவருக்குக்குற்றாலயமெடுப்பித்தங்
கருத்தியோடமலன்றனணையின்வயினமைத்தனனினிதம்மா. (௧௨௩)

மாடவீதியொடாவணவீதிமாமறையவர்முன்னோர்
நீடுவீதிபின்புறக்குடிவீதியொடமைத்தனனிலவேந்தன்
மாடுதானணைந்தடையலர்தமைவென்றமன்னவவெனக்கூறி
நாடியாங்கவணியற்றியபரிசெலாநலக்கவங்கறிவித்தான். (௧௨௪)

இன்னவாறவன்மயன்மிகநாணுறவியற்றிவேந்தனையெய்தி
இன்னதேவகுலந்தனைக்கட்டியேநிறீஇயினனெனச்சொல்ல
மன்னன்றானுந்தனவனமுதலனவகுத்திடப்புரிந்தன்றிப்
பின்னுமங்கலவாவிமுன்னாயினபுதுக்கினன்பெரிதம்மா. (௧௨௫)

முல்லைமால்வனந்தனைநகரெனநனிமொழிதரத்தான்மாற்றிச்
சொல்லிறந்தவப்பரம்பரன்றன்னைமாசிலாமணியெனச்சொல்லி
நல்லிடைக்கொடியிடையெனவுமைதிருநாமமங்கமைத்தென்று
மெல்லையில்லதாஞ்சிறப்பெலாமெய்தினனிறையவன்மிகமன்னே. (௧௨௬)

போதமூன்றினும்புண்ணியனருட்டிருப்பொன்னுருத்தனைத்தீண்டு
நீதியார்முன்னாமறுவகைச்சைவரைநிலவிடக்குடியேற்றி
மாதுபாகனாராலயக்கப்புழன்மருங்கினிற்கொணர்ந்திட்ட
காதுவேல்வயிரவன்றனைக்காவலாயமைத்தனன்கடிதன்றே. (௧௨௭)

பின்னுநற்சுபவேளையிலாங்கவன்பெரிதுளமகிழ்கூர்ந்து
தன்னையேபொருங்கும்பாபிடேகமேதான்புரிந்தமலேசன்
கன்னியோடுகந்தன்கணபதிசண்டிகவின்மகோற்சவஞ்செய்து
மன்னிவீறினனிரணியவன்மனைமானமாப்புகழுற்றான். (௧௨௮)

இன்னதன்மையைக்கேட்டிவன்முன்னவனெழின்முல்லைநகரெய்தி
மன்னராங்குசலவர்நனிபூசனையாற்றியமாதேவன்
சந்நிதிக்கெதிர்தன்பெயரானொருதனிக்குறிதாபித்துப்
பொன்னெடுந்திருக்கோயிலைவகுத்துப்பின்புரிதவப்பயனுற்றான். (௧௨௯)

வேந்தர்தம்பிரான்றொண்டைமானம்பிரான்வியன்கழனணியேத்தி
மாந்தர்யாவரும்பரசிடச்சிறப்பொடுபூசனைவழாதென்றும்
ஆந்தகும்பரிசமைத்தனனிங்ஙனமாற்றியேயமலேசன்
சேந்தபங்கயச்சீறடியெய்தினன்செப்பிடும்பாற்றேயோ. (௧௩௦)

வேறு.

தொண்டைமான்கடகளிற்றெருடுமுல்லையாற்றெடக்குற்
றண்டர்வாணனைவழிபடலீண்டுநாமறைந்தாம்
விண்டசீர்ச்சிவாலயதரிசனவிதியன்பு
கொண்டுரைத்துமாலென்றெருசூதனுங்கூறும். (கருக)

தொண்டைமான் வழிபடுபடலமுற்றிற்று.

---

# சிவாலயதரிசன விதிப்படலம்

என்றெடுங்குங்கமயந்தனக்கிரண்டரைகடிகை
என்னவார்புனற்றடமடைந்தியாக்கையைச்சுத்தந்
தன்னமின்றியேசெய்திருங்கண்மணிதனைப்பூண்
டன்புவாய்ந்தவர்குழுவொடுமணுகவாதரவான். (க)

மூந்தரம்பையின்கனியிலாங்கலிமொழிகுடஞ்
சந்தமாரடைகாயலதெத்தகுகனியுஞ்
சிந்தையன்பொடுங்கொடுசென்றுசிவன்றிருத்தளியை
வந்தணைந்திடலில்லையேற்றுரான்மகிழ்ந்தொழிக்க. (உ)

இறைவனுகமமியாதினைத்தூலலிங்கமதா
யறையுமத்தகுகோபுரமன்பொடுந்தாழ்ந்து
முறையினுட்புகுந்தானைமாமுகனையுட்குழைந்து
மறைசொலும்விடைத்தேவர்தம்மருங்கணைந்திறைஞ்சி. (௩)

அறவனைப்பணிவானருளென்றவன்றன்னை
முறையின்வேண்டமற்றவன்விடைமொழிந்ததாக்கருதிக்
குறைதெறக்கரமிரண்டையுந்தலைமிசைகூப்பி
நிறையுமன்பொடுநிருத்தனர்சேவடிநினைந்து. (ச)

கங்கைதங்கியசெஞ்சடைக்கடவுளைமலையான்
மங்கைபங்கனையடைந்தவன்மன்னிவீற்றிருக்கு
மங்கலம்பெறுசந்நிதிமுற்சிவமறையோன்
அங்கையிற்கொடுவந்தனவனைத்தையும்வழங்கி. (ரு)

அனையனூற்றுபசாரங்களனைத்தையுநோக்கிக்
கனிவினோடருட்பாக்களைக்கழறியேநின்று
புனையப்பொன்னுருவளித்திடும்பொற்புகீடியகீ
தினறெறச்சிவமறையவனல்கவேற்றிருகை. (௬)

சேயதாயடைந்ததிற்றினையேனுமண்வீழா
தேயவாவொடுமணிந்துசென்றெம்மையாளுடைய
நாயனூர்சோமாக்கந்தனைநலக்கமுற்பணிந்து
பாயசீர்க்கல்லாலடிகளைப்பரவுதல்செய்து. (௭)

துஞ்சக்கன்றைக்குழைந்துநின்றெருருகுறமகட்குக்
குஞ்சரிக்கொருகணவனுங்குமரனைப்பரசி
நெஞ்சநின்றுநீராளமாயுருகநீளாக்
மஞ்சொலும்முறைமையின்வலம்வருவதுமுறையால். (௮)

கலணநீக்கியாங்கிருகரந்தகுமுறைகுவித்து
மலைதருங்கொடிமணாளனைமனத்தகத்திருத்தி
நலனுறச்சிந்தித்தாயினுநலக்கமற்றவன்ற
னிலகுதோத்திரமோதியேயாயினுமியைந்து. (௯)

தொண்டில்வன்றெண்டுமென்றெண்டென்றுகமஞ்சொன்ன
தொண்டினின்றெம்மையாண்டவேழொன்பதாந்தொகைசேர்
தொண்டர்தம்மைநாவலவனூரோதியதுரிசில்
பண்டையன்பரையிறைவனின்விழுமிதாப்பகர்ந்து. (௧௦)

நின்றபான்மைசேர்நீற்றிடையன்புறும்பெருமை
துன்றுசீர்த்தியாளரைத்துதிபுரிந்துநின்றேனும்
அன்றினூர்புரமட்டவன்கோயிலைவலம்வந்
தென்றுமன்பொடுபொலிவராலிகபரங்கருதி. (௧௧)

அடியெடுத்துவைத்திடைவெளிதோற்றிடாதாங்கு
மிடையுமும்முறைவலம்வரல்சாலவும்விதியால்
கடைபடுங்குணுங்காவர்கைவீசியேசெல்லின்
அடலரக்கரோயாவர்மார்புறப்பிணித்தடையின். (௧௨)

அஞ்சலித்தடைவாரெனினமரரேயாவர்
விஞ்சுமாகமம்விளம்பியமுறையிதுவாமால்
மஞ்சுலாம்பொழில்சூழெழிற்சேய்ஞலூர்வருவார்
தஞ்சரண்பணிந்திருகர்ந்தட்டியேயெற்கு. (௧௩)

தரிசனப்பலன் றருதியென் றஞ்சலிதான்செய்
துருவவோடரித்தடங்கணெம்முடையநாயகிதன்
மருமலர்ப்பதம்வாழ்த்தியேயருச்சனைபுரிந்திட்
டருளுநீற்றெடுசெய்யசாந்தன்பொடுமேற்றே. (கச)

பையவேவலம்வந்தொருகொடிமரப்பாங்கி
னைதினெய்தியட்டாங்கமைங்காற்புரிந்திட்டெம்
மையனுமமோர்சாசரமத்துணையகோர
முய்யுமாறிவண்கணித்திடவேண்டுமானுரவீர். (கரு)

**சிவாலயதரிசன விதிப்படல முற்றிற்று.**

---

## வாழ்த்து.

வையமோங்குகமாமழைமல்குக
செய்யகோலொருவாதுசெழிக்கமெய்ச்
சைவமோங்கதனித்திருக்கண்மணி
யுய்யுநீற்றினேடோங்கவுலகெலாம்.

---

## நூற்பயன்.

இன்னநூலையெழுதிப்படித்துளோர்
அன்னதன்பொருளாய்ந்துரைசெய்குவோர்
இன்னறீர்ந்திட்டிகபரமெய்திப்பின்
கன்னிபாகன்சீர்க்கான்மலரெய்தவே.

## திருமுல்லைவாயிற் புராணம் முற்றிற்று.

---

ஸ்ரீமெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.
ஸ்ரீசிவஞான யோகிகள் சேவடி வாழ்க.



# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- | --- |
| ௨௩ | ௩௨ | ௩ | கணங்களெல்லாம் ... | கணங்கள் |
| ௨௪ | ௩௯ | ௨ | புகக்செங்கோல் ... | புகச்செங்கோல் |
| ௩௮ | ௨ | ௬ | வயங்ஙி ... | வயங்கி |
| ௪௨ | ௩௭ | ௨ | தருமன்னுய் ... | தருபொற்கொடி |
| ௪௩ | ௪௫ | ௪ | ரல்ளாரோல் ... | ரல்லாரார் |
| ௪௭ | ௧௮ | ௪ | யாமல் ... | யன்றி |
| ௭௪ | ௩௮ | ௩ | மிரங்கிரீயாற்றிய ... | மெளிதடைந்தாற்றிய |
| ௮௮ | ௪ | ௧ | வணைப்பெய்தும் ... | வனப்பெய்தும் |
| ௮௮ | ௩௪ | ௨ | மான்புடை ... | மாண்புடை |
| ௮௮ | ௪ | ௪ | வசிட்டனை ... | வசிட்டனை |
| ௮௯ | ௯ | ௪ | தயோதியர் ... | தயோத்தியர் |
| ௯௨ | ௩௪ | ௨ | போரடுகென்ருள் ... | போரடுகென்ருன் |
| ௧0௭ | ௧௭௫ | ௩ | பறையுமவன் ... | பறவைக்கவன் |
| ௧௪0 | ௬ | ௪ | பூரணை ... | பூரணி |
| ௧௪௬ | ௫ | ௧ | சேகத்திர ... | கோத்திர |

# இந்நூலாசிரிய ரியற்றிய நூல்கள்.

1. வடதிரு முல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி.
2. திருப்போரூர் ஆண்டவன் பதிற்றுப்பத்தந்தாதி.
3. சென்னை விநாயகர் பதிற்றுப்பத்தந்தாதி.
4. கூவம் திரிபுரசுந்தரி பதிற்றுப்பத்தந்தாதி.
5. சமுகாசல சதகம்.
6. வேதகிரீசர் வண்ணம்.
7. சிந்தான குரவர் நான்மணிமாலை.
8. பழநி மும்மணிக்கோவை.
9. கந்தகோட்ட மாலை.
10. விநாயகர் இரட்டை மணிமாலை.
11. திருத்தணிகைமாலை.
12. இராஜராஜேஸ்வரி மாலை.
13. வடிவுடையம்மை மாலை.
14. மாசிலா மணிமாலை.
15. சென்னைக் கந்தர்மாலை.
16. கந்தரனுபூதி யுரை.
17. பிச்சாடன நவமணிமாலை யுரை முதலியன.

# விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டுவோர் கீழ்க்குறித்துள்ளவர்களிடத்தில் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம் :—

1. இந்நூலாசிரியர்,
   29. சாமிபிள்ளைவீதி, சூளை.
2. ஸ்ரீரு. கிருஷ்ணசாமி முதலியார்,
   சிறுவள்ளூர்.
3. ஸ்ரீா. நமச்சிவாய முதலியார்,
   12. ஏகவல்லியம்மன் கோயில்வீதி, சென்னை.
4. ரிப்பன் அச்சுக்கூடம்,
   தம்புசெட்டிவீதி, சென்னை.
5. தாம்சன் கம்பெனி,
   பிராட்வே, சென்னை.
6. நாகேசுர குருக்கள்,
   திருமுல்லைவாயில்.
7. திரு-இராமசாமிசெட்டியார்,
   சீனிவாசச் செட்டியார் சவுளி, கும்பகோணம்.
8. திரு-சபாபதி பிள்ளை,
   நாஷனல் ஐஸ்கூல், திரிசிரபுரம்.

மார்பில் கட்டடம் விலை அணா. ௮.

காலிகோ கட்டடம் விலை அணா. ௧0.

